# தமிழில் தாவரச் செய்திகள்

(தொகுதி 1)

டாக்டர் K. K. சுந்தர சோபிதராஜ் M.A., Ph.D.,

சோபிதம் பதிப்பகம்,
நாகர்கோவில் 629 001.

தமிழில் தாவரச் செய்திகள்

(தொகுதி-1)

Dr. K.K. சுந்தர சோபித ராஜ் M.A., Ph D.,

முதற்பதிப்பு: மே 1982



சோபிதம் 4

வெளியிட்டோர் :

Dr. K.K. சுந்தர சோபித ராஜ் M.A., Ph.D.,
சோபிதம் பதிப்பகம்,
ராஜமோஹன் சதனம்,
மேற்கு லுத்தரன் தெரு,
நாகர்கோவில் - 629 001.

விலை ரூ. 5/-

அச்சிட்டோர்:
ரத்னா அச்சகம்
நாகர்கோவில் - 629 001.

## சமர்ப்பணம்

சிநேக பாவனைகளினூடே
என் வாழ்விலும் நலனிலும்
நாட்டம் கொண்ட
அன்பு உள்ளங்களுக்கு . . .

## நூலைப்படிக்கு முன் . . .

தாவர இயல்துறையில் பட்டம் பெற்றபின் விதிவசத்தால் தமிழ் எம்.ஏ., படிக்க நேர்ந்தது. எம்.ஏ., பட்டப்படிப்பின் ஒரு பகுதியாக ஆய்வுக்கட்டுரை ஒன்று எழுத வேண்டியதேற் பட்டபோது இலக்கியத்தில் பயின்று வந்துள்ள தாவரங்கள் பற்றிய கட்டுரைகள் உள்ளனவா என்று தேடினேன். மிகச் சிலவே கண்ணில்பட்டன. தாவர இயல்துறையில் உள்ள ஆர்வத்தால் அன்று **'சிலம்பில் தாவரங்கள்'** என்ற ஆய்வுக் கட்டுரை முழுமை பெற்றது.

பி. எச். டி., பட்டத்திற்காக ஆய்வு செய்த போதும் **'பக்திக் காலத்தாவரங்கள் - இலக்கியங்கள், கல்வெட்டுக்கள் அடிப் படையில்'** என்னும் தலைப்பையே தேர்ந்தெடுத்தேன். ஆய்வு தொடங்கிய காலத்தில் பக்தி இலக்கியத்தில் மட்டுமன்றிப் பிற இலக்கியங்களிலும் காணப்பட்ட தாவரச்செய்திகள், தாவரங்கள் தொடர்பான கதைகள் ஆகியவற்றைத் திரட்டி னேன். அச்செய்திகளில் சிலவற்றை மட்டும் தொகுத்து தனித்தனிக் கட்டுரைகளாக எழுதி வந்தேன். அக்கட்டுரை களுள் ஐந்து மட்டும் நூல் வடிவம் பெறுகிறது.

**'தமிழில் தாவரச் செய்திகள்'** எனும் இச்சிறு நூலைத் தொடர்ந்து மேலும் சில தொகுதிகளுக்கான செய்திகளைச் சேகரித்து வருகிறேன். நூலைப்படிக்கும் தமிழறிந்தோரும், தாவரஇயலாரும் இந்நூலின் குறைநிறைகளை எழுதி ஊக்கம் தருவது பின்வரும் தொகுதிகளில் குறைகள் நேராத வாறு தவிர்க்க இயலும் என நம்புகிறேன்.

இச்சிறு நூலில் இடம் பெற்றுள்ள கட்டுரைகளைப் படித்துத் திருத்தம் செய்தும் முன்னுரை எழுதியும் உதவியதோடு இத்துறையில் மேலும் கட்டுரைகள் பல எழுத வேண்டும் என நாளும் ஊக்கப்படுத்தும் என் ஆய்வு வழிகாட்டியும் கேரளப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை விரிவுரையாளருமான டாக்டர். கி. நாச்சிமுத்து, M.A., Ph.D., அவர்களுக்கும்—

இந்நூலின் இறுதியில் இடம் பெற்றுள்ள அட்டவணைப் பகுதியைச் சரிபார்த்து உதவிய ஸ்காட் கிறிஸ்தவக் கல்லூரி தாவரஇயல்துறைப் பேராசிரியரும் என் அன்பு ஆசிரியருமான டாக்டர். A. தேவ சோபனராஜ் M.Sc., Ph.D., அவர்களுக்கும்—

நூல் வெளியீட்டிற்கு உதவிய அன்பு நண்பர் பாலுவுக்கும் அவர் மனைவி காஞ்சனா பாலுவுக்கும்—

எனக்கு உதவிகள் பல புரிந்து, என்னைக் குறைகூறிவரும் என்பால் அன்புள்ளம் கொண்ட அனைவருக்கும் —

என் இதய நன்றி...

அனைத்துக்கும் மேலாக —
என்னை நல்வழியில் நடத்தும்
எல்லாம் வல்ல இறைவனுக்கு

நன்றி.

கே. கே. சுந்தர சோபித ராஜ்
சோபிதம் பதிப்பகம்,
நாகர்கோவில்-629 001.

மானிடவியலார் முதலியோர் ஆராய்வர். (பார்க்க: சபீர், பெஞ்சமின், லீ வோர்ப் முதலியோர் நூல்கள்.)

பழங்காலத்தில் எல்லா மனித இனக் குழுக்களுமே தாவரம் முதலியவற்றைத் தங்கள் அனுபவத்திற்கு ஏற்ப அறிந்து பெயரிட்டுப் பாகுபடுத்தி வந்துள்ளனர். ஆனால் அத்தகைய பெயர்கள், பாகுபாடுகள் விஞ்ஞான பூர்வ அறிவாராய்ச்சிக்குப் போதாமையாலேயே நுணுக்கமான, செயல்முறைப் பாகுபாடுகள் தாவரவியல் முதலியவற்றில் தோன்றின. எனவே ஒவ்வொரு மொழியிலும் காணப்படும் சாதாரணமாக வழங்கும் பெயர்களையும் அவற்றின் பாகுபாட்டு அடிப்படைகளையும் ஆராய்வது, அவ்வம் மொழிகளின் பொருளமைப்பு முறைகளை வரையறுத்துக் காட்டுவதோடு, அவ்வம் மொழி பேசுவோரின் அனுபவங்கள், அறிவு வளர்ச்சிகள் ஆகியவற்றை அறியவும் உதவும்.

இந்த நோக்கில் எழுந்தவைகளே 'தமிழில் தாவரப் பெயர் முறை' 'குறுந்தொகை கூறும் தாவர உறுப்புப் பெயர்கள் — தொல்காப்பிய மரபியல் செய்திகள்' என்ற இரு கட்டுரைகளும். முதல் கட்டுரை தமிழில் வழங்கும் தாவரப் பெயர்களின் பெயரமைப்பு முறைகளை ஆராய்ந்து அதனால் புலனாகும் தமிழ் மக்களது தாவரப் பாகுபாட்டு அடிப்படைகளைச் (Folk Taxonomy) சுட்ட முயல்கிறது. அடுத்த கட்டுரை தொல்காப்பியர் மரபியலில் வரையறுத்துக் கூறும் தாவரம் பற்றிய பொருளமைப்பு முறை (Semantic System) குறுந்தொகை இலக்கிய மொழியில் எங்ஙனம் காணப்படுகிறது என்பதை விவரிக்கிறது.

தமிழில் தாவரங்களின் உறுப்புகள், தொகுதி முதலியவற்றை குறிக்கும் பொதுப் பெயர்கள், தாவரங்களது தனிப்பெயர்கள் முதலியவற்றைக் குறிக்கும் சிறப்புப் பெயர்

கள் ஆகியவற்றைப் பேச்சு வழக்கிலிருந்தும் இலக்கிய வழக்கிலிருந்தும் தொகுத்து வைத்துக் கொண்டு இத்தகைய ஆய்வை மேற் கொள்வதற்கு இக்கட்டுரைகள் முதல் முயற்சியும் முதல் படியுமாய் அமைகின்றன.

'திருவாசகத்தில் சிவனும் தாவரங்களும்' 'வழிபாட்டில் மலர்கள்' என்ற இருகட்டுரைகளும் சமய வழிபாட்டிலும் குறியீட்டிலும் மலர்கள் பெற்றிருந்த இடத்தை விளக்குகின்றன.

'நந்திக்கலம்பகத்தின் தாவரங்கள்' என்ற இறுதிக் கட்டுரை பக்திக்கால இலக்கியமான நந்திக்கலம்பகத்தின் தாவரச் செய்திகளைச் சுட்டுகிறது.

பின்னிணைப்பாகச் சேர்க்கப்பட்டுள்ள தாவர அட்டவணை தாவரஇயல் அறிஞர்களுக்கும் பயன்படுவதாகும்.

டாக்டர் கே. கே. சுந்தர சோபிதராஜ் இச்சிறு நூலில் வெளியிடும் கட்டுரைகள் இனி அவரிடமிருந்து வெளிவரப் போகும் அரிய ஆராய்ச்சிகளுக்குக் கட்டியங்கூறும் முன்னோடிகளாக அமைகின்றன. அவருக்கு நாம் தரும் ஊக்கம் அவற்றை வரவேற்று ஆதரிப்பதே. எனவே அவரது தளரா முயற்சி தொடர்க! இனிதே முற்றேமுடிக! என வாழ்த்தி அவரையும் அவருடைய நூலையும் ஆராய்ச்சி உலகுக்கு அறிமுகம் செய்வதில் பெருமகிழ்ச்சி கொள்கின்றேன்.

கி. நாச்சிமுத்து.
6-5-1982

# 1

## தமிழில் தாவரப் பெயர்முறை

உலகில் மனிதஇனம் தோன்றுவதற்கு முன்னரே தாவரங்கள் தோன்றின என்பது அறிவியலார் கருத்து. தாவரங்கள் பல நூற்றாண்டுகளாக இனவிருத்தி செய்து வருகின்றன. தம் இடச்சூழலுக்கு ஏற்றவாறு மாறு பாடுகளைக் கொண்டு விளங்கினாலும், ஒரு தாவரம் மற்றொன்றாக மாறுவது இல்லை.

உயிரியல் அறிஞர்கள், புல் முதலிய தாவரங்கள் தோன்றி, பின்னர் மரம் போன்ற பெரிய தாவரங்கள் தோன்றின எனக் கூறுகின்றனர். மாணிக்கவாசகரும் இதனையே,

> "…. புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
> பல்விருக மாகிப் …. ….
> செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
> எல்லாப் பிறப்பும் பிறந்திளைத் தேன் …."
>
> (திருவாசகம்–சிவபுராணம் : 26–31)

என்று கூறுகிறார்.

மக்களின் வாழ்வின் அன்றாடகத் தேவைகளுள் ஒன்றாகத் தாவரங்களும் தாவரப் பொருட்களும் விளங்கு கின்றன. தாவரங்களின் பெயர்களை மக்கள் தங்கள் குழந்தைகளுக்கும் ஊர்களுக்கும் பெயராக இடுவதை

எல்லா மொழிகளிலும் நாம் காணலாம். தமிழர்களும் இதற்கு விதிவிலக்காக அமையவில்லை.

| மக்களின் பெயர்கள் | ஊர்ப் பெயர்கள் |
| --- | --- |
| செண்பகம் | கடம்பூர் |
| தாமரைக்கண்ணி | காஞ்சிபுரம் |
| மருதப்பன் | குற்றாலம் |
| மல்லிகா | குறும்பலாப் பேரி. |
| மாதவி | துவரங்காடு |
| லதா | புளியங்குடி |

தாவரங்களின் பெயர்களைக் குறிப்பிடும் தமிழ்ச் சொற்கள் குறுகிய வடிவில் இருக்கும். ஓரசைச் சொற்களாகவோ ஈரசைச் சொற்களாகவோ தான் காணப்படும். அவை சொல்வதற்கு வசதியாகவும் எளியதாகவும் அமைந்துள்ளன. இனிய மெல்லோசை கொண்டு முடியும் அச்சொற்கள் பொதுவாக ஆ, இ, உ, ஐ, ம் முதலிய எழுத்துக்களைக் கொண்டே முடியும்.

ஆ — உகா, களா, பலா, மா, விளா
இ — காஞ்சி, குறிஞ்சி, வஞ்சி, வெட்சி
உ — அசோகு, அரசு, கடுகு, கரும்பு, கோங்கு, தேக்கு, புன்கு, மிளகு
ஐ — இலுப்பை, குவளை, தாமரை, தென்னை, பனை, புன்னை, மல்லிகை, முல்லை.
ம் — ஆரம், சண்பகம், சீரகம், நரந்தம், நாகம்

சிறுபான்மை ய், ர், ல், ள், கொண்டு முடியும்.

ய் — வேய்
ர் — ஆர்

ல் — ஆம்பல், ஆல், நெய்தல், வேல்
ள் — மஞ்சள், காந்தள்

சில தாவரப் பெயர்களின் முன்னால் சில அடைகளைச் சேர்த்து வேறு தாவரங்களையும் அவற்றின் இனமான தாவரங்களையும் குறிக்கப் பயன்படுத்தினர்.

எருக்கு — வெள்எருக்கு
தாழை — கற்றாழை
பாலை — வெட்பாலை
மஞ்சள் — மரமஞ்சள்
வேல் — வெள்வேல்

சில தாவரங்களை அவை மலரும் காலத்தின் அடிப்படையில் பெயரிட்டு அழைத்தனர்.

அந்திமந்தாரை
அல்லி
கார்த்திகைப்பூ

தாவரங்களின் உறுப்புக்களின் அமைப்புக் கொண்டும் சிலவற்றிற்குப் பெயரிட்டனர்.

கலப்பைக் கிழங்கு — இத்தாவரத்தின் கிழங்கு கலப்பை வடிவம் உடையது.

சில தாவர வகைகளை மலர்களின் நிறங்களைப் பெயரின் முன்னர் குறிப்பிடுவதன் வாயிலாக வெளிப்படுத்தினர்.

காந்தள் — செங்காந்தள் — வெண்காந்தள்
தாமரை — செந்தாமரை — வெண்டாமரை
துளசி — கருந்துளசி — வெண்துளசி

மலர்களின் மணத்தின் அடிப்படையிலும் சில தாவரங்களுக்குப் பெயரிட்டனர்.

*நள்ளிருள் நாறி*

*பூ நாறி.*

தாவரங்களில் சில அவற்றின் புறத்தோற்றங்களில் காணப்படும் சிறப்பு அம்சங்களை அடையாகப் பெற்று வருகின்றன.

*முள்முருக்கு*
*முள்ளிலவு*

சில தாவரங்கள் அவற்றின் பயன் அடிப்படையில் பெயரிட்டழைக்கப்படுகின்றதைக் காணலாம்.

*நஞ்சறுப்பான் கொடி*
*புகையிலை*

சிறு குழந்தைகள் விளையாடும் கிலுகிலுப்பை போன்று ஓசை தரும் காயுடைய செடியினைக் கிலுகிலுப்பைச் செடி என்றே அழைக்கின்றனர்.

பழங்களின் வடிவ அமைப்பின் அடிப்படையிலும் சில தாவரங்கள் பெயர் பெறுகின்றன.

*குதிரை வாலி*
*தேள் கொடுக்கி*

நாய் போன்ற சிறிய விலங்கினங்களின் மீது பற்றிக் கொண்டு பரவும் விதையைக் கொண்ட செடியை நாயுருவி என்ற பெயராலேயே அழைக்கின்றனர்.

வளரும் இடத்தின் அடிப்படையிலும் தாவரங்கள் பெயரிடப்படுகின்றன.

*ஆற்றுப் பூவரசு*
*குப்பை மேனி*
*மலை அத்தி*
*மலைக் குன்றி*

வளரும் இடத்தின் அடிப்படையில் மட்டுமன்றி புறத் தோற்றத்தின் சிறப்பு அம்சங்களை இணைத்தும் கூறப்படும் தமிழ்த் தாவரப்பெயர்களும் உள்ளன.

*நீர்முள்ளி*

பயன்படும் தாவரப்பகுதியின் சுவை அடிப்படையிலும் தாவரங்களில் சில பெயரிடப்படுகின்றன.

*அதிமதுரம்*

*தேமாங்கனி*

*புளியங்காய்*

ஆடையில் ஒட்டும் காயுடைய புல் ஆடையொட்டி என்று பெயரிட்டழைக்கப்படுகிறது.

விலங்குகளின் பெயர்களாலும் சில தாவரங்கள் அழைக்கப்படுகின்றன.

*நாகம்*

*மா*

*வேங்கை*

தாவரங்கள் இடத்துக்கு இடம் வேறு பெயர்களாலும் அழைக்கப்படுகின்றன. சில பெயர்கள் சிறிய வேறுபாடுகள் மட்டுமே அடைகின்றன.

*கீழ்காய்நெல்லி — கீழாநெல்லி*

சில பெயர்கள் முற்றிலும் வேறுபாடடைந்து காணப் படுகின்றன.

*கூவிளம் — வில்வம்*

*கொய்யா — பேரை*

*பலா — சக்கை*

*பூவரசு — சீலாந்தி*

பிறமொழித் தாவரப் பெயர்கள் மொழிமாற்றத்தின் போது சிறிய வேறுபாடே அடைகின்றன.

| சமஸ்கிருதம் | — | தமிழ் |
|---|---|---|
| கமலா | — | கமலம் |
| மல்லிகா | — | மல்லிகை |
| பலாசா | — | பலாசம் |
| அசோகா | — | அசோகம் |

பிற இடங்களிலிருந்து கொண்டு வரப்படும் சில தாவரங்களுக்கு அந்தந்த இடங்களில் வழங்கும் பெயரையே இடுகின்றனர்,

| | | |
|---|---|---|
| **Crotans** | — | குரோட்டன்ஸ் |
| **Archids** | — | ஆர்க்கிடுகள் |
| **Lily** | — | லில்லி |

சில தாவரங்கள் புறத்தோற்றத்தின் அடிப்படையில் பெயரிடப்படுகின்றன.

விசிறி வாழை

சில தாவரப்பெயர்கள் காலப்போக்கில் மாறுதலடைந்துள்ளன.

கவரிச்சம்பா—கஸ்தூரிச்சம்பா

கார்த்திகை மாதத்தில் விளையும் நெல் **கார்த்திகைச் சம்பா** எனவும், அறுபது நாளில் விளையும் குறுவை நெல் **அறுபதாங் குறுவை** எனவும் அவை பயிரிடப்படும் காலத்தின் அடிப்படையில் பெயரிடப்பட்டுள்ளன.

இன்று புதிதாகக் கண்டு பிடித்துள்ள நெல்வகைகளுக்கு ஊர்ப்பெயர், மக்களின் பெயர், ஆகியவை தவிர எண்ணிட்டுக் குறிக்கும் வழக்கமும் உள்ளது.

ஊர்ப் பெயர் — ஆடுதுறை, காஞ்சி

*மக்களின் பெயர்* — *அன்னபூரணி, கருணை*
*எண்* — *ஐ. ஆர்.-5, ஐ. ஆர்-8,*
*ஐ. ஆர்-20*

ஒட்டு முறையில் விவசாயக் கல்லூரியினர் கண்டு பிடித்துள்ள கம்பு, சோளம் போன்ற தாவரங்களை ஒட்டுக் கம்பு, வீரியக்கம்பு, காலேஜ் கம்பு, ஒட்டுச் சோளம், வீரியச் சோளம், காலேஜ் சோளம் எனப் பலவிதமாகப் பெயரிட்டழைக்கின்றனர்.

ஒரே தாவரத்தை வேறு பெயராலும் குறிப்பிடும் நிலையும் உள்ளது.

| | | |
|---|---|---|
| *ஆ* | — | *ஆச்சா* |
| *ஆர்* | — | *ஆத்தி* |
| *ஆரம்* | — | *சந்தனம்* |
| *குரவம்* | — | *குரா* |
| *மரவம்* | — | *மரா – வெண்கடம்பு* |

பல்வேறு விதமாகப் பெயரிட்டழைக்கப்படும் தாவரங் களில் ஒரு சிலவற்றை மட்டுமே சுட்டிக் காரணம் காட்டும் இக்கட்டுரையின் செய்திகள் முழுமையுடையதன்று. தாவரங்களுக்கு வழங்கப்படும் பெயர்களை-ஊர்வாரியாகத் தொகுத்துச் செய்வது மேலும் பயனுடையதாகும்.



# 2

## குறுந்தொகை கூறும் தாவர உறுப்புப் பெயர்கள் — தொல்காப்பிய மரபியல் செய்திகள் - ஒப்பீடு.

தொல்காப்பியர் பொருளதிகாரத்தின் மரபியலில்,

*"புல்லும் மரனும் ஓரறி வினவே*
*பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே."*
(மரபியல் : 28)

எனப் புல், மரம் என்னும் இரண்டினையும் ஓரறிவுடைய உயிரினங்களாகக் குறிப்பிடுகிறார். புறவயிர்ப்புடையன வற்றைப் புல்லெனவும், அகவயிர்ப்புடையனவற்றை மர மெனவும் அவரே வேறுபடுத்திக் காட்டியுள்ளார். மேலும் அவர் புல்லின் உறுப்புக்களையும் மரத்தின் உறுப்புக்களையும் தனித்தனியாக விளக்குகிறார். தாவர இயலார், ஒரு விதையிலைத் தாவரங்கள் என்று குறிப்பிடுவனவற்றைத் தொல்காப்பியர் புல் எனவும், இருவிதையிலைத் தாவரங் கள் என்று குறிப்பிடுவனவற்றை மரம் எனவும் குறித் துள்ளார் என்ற கருத்து பொதுவாகக் கூறப்படுகிறது. அவரது பாகுபாடு இலக்கியங்களில் பயின்று வந்துள்ள மையை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம். முதற் கட்டமாக சங்க இலக்கியங்களுள் ஒன்றான குறுந்தொகை யில் வந்துள்ள தாவர உறுப்புப் பெயர்களைக் கொண்டு

தொல்காப்பியரது பாகுபாடு அறிவியலார் பாகுபாட்டுடன் ஒத்துள்ளதா என்பதைக் காணலாம்.

புல்லின் உறுப்புக்கள் :-

புல்லின் உறுப்புக்களைத் தொல்காப்பியர்,

"தோடே மடலே ஓலை என்று
ஏடே இதழே பாளை என்று
ஈர்க்கே குலையே நேர்ந்தன பிறவும்
புல்லொடு வருமெனச் சொல்லினர் புலவர்."
(மரபியல் : 88)

என்று குறிப்பிடுகிறார். தோடு, மடல், ஓலை, ஏடு, இதழ், பாளை, ஈர்க்கு, குலை என்னும் எட்டும் புல் உறுப்புக்கள் எனக் குறிப்பிடுகிறார் தொல்காப்பியர். குறுந்தொகையில் தோடு, மடல், இதழ், பாளை, குலை என்னும் 5 உறுப்புக்களின் பெயர்கள் வருகின்றன.

(i) தோடு :-

தோடு என்ற சொல் பனையின் மடலுடன் கூடிய குருத்தோலையையும், தாழையின் மடலையும் குறிக்கப் பயன்படுத்தப்படுகிறது.

"போந்தைக் குடுமி வெண்டோடு" 281 : 2.
"வீழ்தாழ் தாழை யூழுறு கொழுமுகை
குருகுளி ரிடத்தின் விரிபுதோ டவிழும்"
228 : 1-2.

(ii) மடல் :-

மடல் என்பது கருக்குடன் கூடிய பனை ஓலையைக் குறிக்கும் சொல். குறுந்தொகையில் பனை ஓலையையும், தாழையின் முள் நிறைந்த இலையையும் இச்சொல் குறிப்பிடுகிறது.

"மாவென மடலு மூர்ப" 17 : 1

"மடலொடு மறுகில்" 32 : 4
"மடரும் பெண்ணை" 81 : 7
"மன்றவம் பெண்ணை மடல்" 177 : 3.
"விழுத்தலைப் பெண்ணை விளையன் மாமடல்" 182 : 1.
"பெண்ணைக் கொழுமடல்" 301 : 1-2.
"பனைத்தலைக் கருக்குடை நெடுமடல் குருத்தொடு மாய்" 372 : 1.

இவ்வேழு தொடர்களிலும் மடல் என்ற சொல் பனை ஓலையைக் குறிக்கிறது.

"கொழு மடற் றாழை" 245 : 3.

எனும் ஓரிடத்தில் தாழையின் இலை மடல் என்ற சொல்லால் குறிக்கப்படுகிறது.

(iii) இதழ் :-

பூவின் தேனினங்களைக் கவர வசீகரமாகத் தோன்றும் பாகம் இதழ் எனப்படுகிறது.

"நாறிதழ்க் குவளை" 62 : 2.
"குவளை பல்லிதழ்" 291 : 7.
"மாயிதழ்க் குவளை" 339 : 5.
"நிரையிதழ்க் குவளை" 388 : 1.
"வள்ளிதழ்க் குறைந்த கூழை நெய்தல்" 227 : 2-3.
"வள்ளிதழ் நீலம்" 365 : 5.
"தண்ணறுங் காந்தள்
முகையவிழ் தாஅ நாறு நறுநுதற்
பல்லிதழ்" 259 : 2-4.
"காந்தள்...... ......இதழ் தளை அவிழ்ந்த" 265 : 5.
"கவரிதழ்" 103 : 1.

*"சிறுவீ முல்லைக் கொம்பிற் ருஅய்*
*இதழழிந் தூறும்"* 348 : 3-4.

மேலே காட்டிய வரிகளில் குவளை, நெய்தல், நீலம் என்னும் நீர்வாழ் தாவரங்களும், கவிர் என்னும் மரமும், காந்தள், முல்லை என்னும் இருகொடிகளும் இதழ் என்னும் உறுப்புப் பெயருடையனவாகக் கூறப்பட்டுள்ளன.

(iv) பாளை :-

பனை, தென்னை, கமுகு போன்ற தாவரங்களின் பூங்கொத்து பாளை என்ற சொல்லால் குறிக்கப்படுகிறது.

*"பாளை தந்த பஞ்சியங் குறுங்காய்*
*ஓங்கிரும் பெண்ணை நுங்கொடு பெயரும்"*
293 : 2-3.

(v) குலை

*"குலைக் காந்தள்"* 1 : 4 ; 239 : 3 என இரு இடங்களில் காந்தளின் பூங்கொத்து குலை என்ற சொல்லால் குறிக்கப்படுகிறது.

பனை, தாழை, குவளை, நெய்தல், நீலம், காந்தள், கவிர், முல்லை என்னும் எட்டுத் தாவரங்களும் புல்லின உறுப்புப் பெயர்களைக் கொண்டுள்ளன. பனையின் தோடு, மடல், பாளை எனும் மூன்று உறுப்புப் பெயர்கள் பற்றிய குறிப்பு குறுந்தொகையில் உள்ளது. தாழையின் தோடு, மடல் எனும் இரண்டு உறுப்புப் பெயர்களும், காந்தளின் இதழ், குலை என்னும் இரண்டு உறுப்புப் பெயர்களும் குறிப்பிடப்பட்டுள்ளன. குவளை, நீலம், நெய்தல் என்னும் மூன்று நீர்வாழ் தாவரங்களும், கவிர் மரமும், முல்லைக் கொடியும் இதழ் எனும் ஓர் உறுப்புப் பெயரால் குறிப்பிடப்பட்டுள்ளன.

தாவர இயலாரின் பிரிவுடன் ஒப்பிட்டுப் பார்க்கையில் தொல்காப்பியர் கூறிய உறுப்புப் பெயர்களைக் கொண்ட

தாவரங்களில் பனை, தாழை, குவளை, நீலம், நெய்தல், காந்தள் எனும் ஆறும் ஒரு விதையிலைத் தாவரப் பிரிவிலும் அடங்கும். இதழ் என்னும் சொல் 'Petal' என்று தாவர நூலாரால் குறிக்கப்படுகிறது. இருவிதையிலைத் தாவரங்களிலும் இதழ்கள் காணப்படும்.

**மரத்தின் உறுப்புக்கள் :-**

புல் உறுப்புக்களைக் கூறிய தொல்காப்பியர் அடுத்த சூத்திரத்தில் மரத்தின் உறுப்புக்களைக் கூறுகிறார்.

"இலையே முறியே தளிரே தோடே
சினையே குழையே பூவே அரும்பே
நனையே உள்ளுறுத் தனையவை யெல்லாம்
மரனொடு வருஉங் கிளவி என்ப."

(மரபியல் : 89)

இச்சூத்திரத்தில் குறிப்பிட்டுள்ள ஒன்பது உறுப்புக்களில் தோடு தவிர்த்த எட்டு உறுப்புப் பெயர்கள் பற்றிய குறிப்புக்கள் குறுந்தொகையில் காணக் கிடக்கின்றன.

(i) இலை :-

தாவரங்களில் பசுமை நிறத்தோடு அழகாகக் காட்சி தருபவை இலைகள் ஆகும். அவை தாவரங்கள் தமக்குத் தேவையான உணவுகளைச் சேகரிக்க உதவுவன.

"பருவிலைக் குளவி" 100 : 2
"பாசிலை முல்லை" 108 : 3
"சிறியிலை நெருஞ்சி" 202 : 2.
"பாசிலை வாடாவள்ளி" 216 : 1-2
"மானடியன்ன கவட்டிலை யடும்பு" 245 : 1
"இலையிலஞ்சினை .... கோங்கு" 254 : 1-2.
"கொன்னிலைக் குரம்பை" 284 : 7
"பேரிலைப் பகன்றை" 350 : 4

"அகலிலைப் பலவு" 352 : 3

"சேம்பி னலங்கல் வள்ளிலை" 76 : 3

"கூழை யிருவி .... .... ....

பெரும்பெய வண்மையினிலை யொலித்தாங்கு"

133 : 1-3

"முள்ளிலைத் தடவு நிலைத் தாழை" 219 : 5-6

"செவ்விகொள் வரகின் செஞ்சுவற் கலித்த

கௌவை நாற்றின் காரிருளோரிலை" 282 : 1-2.

"காந்தண் முழுமுதல் மெல்லிலை" 361 : 4-5.

இங்கு குறிப்பிட்டுள்ள தொடர்களில் குளவி, முல்லை, நெருஞ்சி, வள்ளி, அடும்பு, கோங்கு, குரம்பை, பசன்றை எனும் ஒன்பது இருவிதையிலைத் தாவரங்களும், சேம்பு, தினை, வரகு, தாழை, காந்தள் எனும் ஐந்து ஒரு விதையிலைத் தாவரங்களுமாக பதினான்கு தாவரங்கள் இலை எனும் உறுப்புப் பெயர் பெற்று வந்துள்ளமையைக் காண்கிறோம்.

(ii) தளிர் :-

மரங்களின் முற்றாத இலை தளிர் எனப்படுகிறது. இந் தொடர்களால் மாமரத்தின் தளிர் குறிப்பிடப்படுகிறது.

"அந்தளிர் மாஅத்து" 278 : 1

"பைங்காண் மாஅத் தந்தளிரன்ன" 331 : 6.

(iii) முறி :-

இச்சொல்லும் தளிர் என்னும் பொருளையே தருவது. குறுந்தொகையில் குறிப்பிடப்படும்

"மேனி முறியினும் வாய்வது" 62 : 5.

"தடலுந் தட்டையு முறியுந் தந்திவை" 223 : 4.

எனும் இரு இடங்களில் தளிர் எனும் பொருளே காணப்படுகிறது.

"மாஅத்து முறிகண் டன்ன" 278 ; 2.
"கறிவளரடுக்கத் தாங்கண் முறி" 288 : 1.

எனும் இரு தொடர்களிலும் மா, மிளகு ஆகியவற்றின் தளிர் முறி எனும் உறுப்புப் பெயரால் குறிக்கப்படுகிறது.

(iv) சினை :-

மரக்கொம்பு சினை என்ற சொல்லால் குறிக்கப்படுகிறது.

"மென்சினைக் காஞ்சி" 10 : 3
"மராஅத்து வேனிலஞ்சினை" 22 : 4
"தீய்ந்த மராஅத் தோங்கல் வெஞ்சினை" 211 : 4
"வேங்கை மேக்கெழு பெருஞ்சினை" 26 : 2.
"வேங்கைப் பூவுடை யலங்குசினை" 134 : 4
"வேங்கை வீயா மென்சினை" 247 : 5
"வேங்கை வாடுபூஞ் சினை" 343 : 6
"மென்சினை யா" 37 : 3
"பொரிதா ளோமை வளிபொரு நெடுஞ்சினை" 79 : 2.

"மென்சினை யா" 37 : 3
"பொரிதா ளோமை வளிபொரு நெடுஞ்சினை" 79 : 2.

"முளிசினை ஓமை" 396 : 3.
"ஞாழற் பலசினை" 81 : 2.
"சினைதொறும் தீம்பழந் தூங்கும் பலவு" 83 : 3
"பலவினருஞ் சினை" 153 : 2.
"தடவினோங்கு சினை" 60 : 3.
"புன்னை மாச்சினை" 175 : 3.
"புன்னை நிலந்தோய் படுசினை" 236 : 4.
"புன்னை அலங்குசினை" 296 : 2

"காயாப் பூக்கெழு பெருஞ்சினை" 183 : 5
"இலையிலஞ்சினை கோங்கு" 254 : 1
"இருப்பை நெடுஞ்சினை" 329 : 2.
"பல்வீ பட்ட பசுநனைக் குரவம்
பொரிப்பூம் புன்கொடு பொழிலணி கொளாஅச்
சினை" 341 : 1–3.
முடச்சினை வெட்சி" 209 : 5

மேற்கூறிய தொடர்களில் காஞ்சி, மரா, வேங்கை, யா, ஓமை, ஞாழல், பலா, தீட்வு, புன்னை, காயா, கோங்கு, இருப்பை, குரவம், புன்கு என்னும் பதினொன்கு மரங்களும் வெட்சி என்னும் செடியும் சினை என்னும் உறுப்புப் பெயர் பெற்று வந்துள்ளமை காண்கிறோம்.

(v) குழை :-

இச்சொல் கொத்தாக் காணப்படும் தளிரைக் குறிக்கிறது.

"குழை பிசைந்தனையேம்" 289 : 3.
"பசுங்குழை" 294 : 6.

எனும் இவ்விரு தொடர்களும் குழை எனும் சொல் கொண்டு வந்துள்ளன. எந்தத் தாவரமும் இங்கு குழை என்னும் உறுப்புப் பெயரால் குறிக்கப்படவில்லை.

(vi) பூ :-

தாவரங்களின் இனப்பெருக்கத்திற்குக் காரணமாய் அமைவது பூ.

"குறிஞ்சிப் பூ" 3 : 3.
"கமழ்பூ மென்சினைக் காஞ்சி" 10 : 3.
"பூவெனக் குவிமுகிழெருக்கங் கண்ணி" 17 : 1-2
"வேம்பின் ஒண்பூ" 24 : 1
"வேம்பினமலை வான்பூ" 281 : 3
"ஆம்பற் பூ" 46 : 2

"புன்கின் பூ" 53 : 2.
"மணிப் பூ" 55 : 5.
"முல்லையாசில் வான்பூ" 108 : 3
"பூமலி தளவம்" 382 : 3
"செம்பூ முருக்கு" 156 : 2
"காயாப் பூ" 18 : 1
"அடும்பின் தார்மணி யன்ன வொண் பூ"
243 : 1-2
"மாஅத்து தாதமர் பூ" 306 : 4
"கானவிருப்பை வேனல் வெண்பூ" 329 : 1
"பகன்றை பொதியவிழ் வான்பூ" 330 : 4
"தோன்றி யொண்பூ" 107 : 1
"குருதிப் பூவின் குலைக் காந்தள்" 1 : 4
"கரும்பின் நாரு வெண்பூ" 85 : 4-5
"தாழை வெண்பூ" 226 : 5
"சுனைப் பூங்குவளை" 321 : 2.

இங்கு குறிப்பிடப்பட்டுள்ள பாடல் அடிகளில் குறிஞ்சி, எருக்கு, வேம்பு, ஆம்பல், முள்ளி (மணிப்பூ), முல்லை, தளவம், முருக்கு, காயா, அரும்பு, மா, இருப்பை, பகன்றை (தோன்றி), காந்தள், கரும்பு, தாழை, குவளை என்னும் தாவரங்களின் பூக்கள் பற்றிய குறிப்புக்கள் உள்ளன. காந்தள், கரும்பு, தாழை, குவளை என்னும் நான்கும் ஒரு விதையிலைத் தாவரங்கள்.

(vii) **அரும்பு:-**

பூ மலர்வதற்கு முன்னர் மொட்டாக இருக்கும் நிலையே அரும்பு.

"அரும்பற மலர்ந்த கருங்கால் வேங்கை" 20 : 1

*"பித்திகத் தரும்பு"* 94 : 1-2

*"நுண்மு ளீங்கைச் செவ்வரும் பூழ்த்த"* 110 : 4

இத்தொடர்களில் வேங்கை, பித்திகம், ஈங்கை எனும் தாவரங்களின் அரும்பு பற்றிய செய்திகள் உள்ளன.

(viii) நனை :-

இதுவும் அரும்பைக் குறிக்கும் சொல்லே.

*"நனை முதிர் புன்கு"* 53 : 2

*"பசுநனை ஞாழல்"* 81 : 2

*"நனைமுதிர் ஞாழல்"* 397 : 1

*"பசுநனைக் குரவம்"* 341 : 1

இத்தொடர்களில் புன்கு, ஞாழல், குரவம் எனும் மலர்களின் அரும்புகள் நனை எனும் சொல்லால் குறிப்பிடப் பட்டுள்ளன.

குளவி, முல்லை, நெருஞ்சி, வள்ளி, அடும்பு, கோங்கு, குரம்பை, பகன்றை, பலா, மா, மிளகு, காஞ்சி, மரா, வேங்கை, யா, ஓமை, ஞாழல், தடா, புன்னை, காயா, வெட்சி, இருப்பை, குரவம், புன்கு, குறிஞ்சி, எருக்கு, வேம்பு, ஆம்பல், முள்ளி, தளவம், முருக்கு, பித்திகை, ஈங்கை, சேம்பு, தினை, தாழை, வரகு, கரும்பு, காந்தள், குவளை என்னும் 40 தாவரங்கள் மர உறுப்புக்களைப் பெற்று வந்துள்ளன. சேம்பு, தினை, தாழை, வரகு, கரும்பு, காந்தள், குவளை என்னும் ஏழு தாவரங்களும் தாவர இயலார் பகுப்பின்படி ஒரு விதையிலைத் தாவரங் களாகும். மீதமுள்ள அனைத்தும் இருவிதையிலைத் தாவரங்களே.

சேம்பு, தினை, வரகு, எனும் மூன்றின் இலை, கரும்பு, குவளை எனும் இரண்டின் பூ, தாழை, காந்தள் எனும் இரண்டின் இலை, பூ ஆகிய உறுப்புக்கள் பற்றிய செய்திகள் உள்ளன.

"காயே பழமே தோலே செதிளே
வீழோ டென்றுங் கவையும் அன்ன"
(மரபியல் : 89)

என்னும் சூத்திரத்தில் புல், மரம் ஆகிய இரண்டிற்கும் பொதுவான உறுப்புக்களைத் தொல்காப்பியர் தருகிறார். செதிள் எனும் ஓர் உறுப்புத்தவிர காய், பழம், தோல், வீழ் என்னும் ஏனைய நான்கும் குறுந்தொகையில் குறிப் பிடப் பட்டுள்ளன.

(i) காய் :-

பூ முதிர்ந்து தோன்றுவது காய்.

"உழுந்தின் ஊழ்ப்படு முதுகாய்" 68 : 1-2
"பொறிகாற் கள்ளி விரிகாய்" 154 : 5
"கவைமுட் கள்ளிக் காய்" 174 : 2
"வேம்பின் பைங்காய்" 196 : 1
"நெல்லியம் பசுங்காய்" 209 : 1
"சிதட்டுக்கா யெள்" 261 : 2
"பாளை தந்த பஞ்சியங் குறுங்காய்" 293 : 2

இங்கு உழுந்து, கள்ளி, வேம்பு, நெல்லி, எள், பனை ஆகிய தாவரங்களின் காய் பற்றிய குறிப்பு உள்ளது. தாவர இயலார் பகுப்புப்படி உழுந்து, கள்ளி, வேம்பு, நெல்லி, எனும் நான்கும் இரு விதையிலைத் தாவரங்கள். எள், பனை இரண்டும் ஒரு விதையிலைத் தாவரங்கள்.

(ii) பழம் :-

காய் கனியும் நிலை பழம் என்ற சொல்லால் குறிக்கப் படுகிறது.

"கழனி மாத்து விளைந்துகு தீம்பழம்" 8 : 1
"தேக்கொக்கின் றீம்பழம்" 164 : 2
"சிறுகோட்டுப் பெரும்பழம்" 18 : 4

"தீம்பழந்தூங்கும் பலவு" 83 : 4
"கலைகை தொட்ட கமழ்சுளைப் பெரும் பழம்" 342:1
"பலவிற் சேர்ந்த பழம்" 385 : 1
"வெண்கோட் டதவத்
தெழுகுளிறு மிதித்த வொருபழம்" 24 : 3-4
"வேப்ப வொண் பழம்" 67 : 2

இத்தொடர்களில் மா, பலா, அத்தி, வேப்பு எனும் மரங்களின் பழம் பற்றிய குறிப்பு உள்ளது. இவை அனைத்தும் தாவர இயலார் பகுப்பின் படி இருவிதையிலைத் தாவரங்களாகும்.

(iii) தோல் :-

"தோனயந் துண்ட பொருதா ளோமே'
79 : 1-2

எனும் இத்தொடரில் ஓமை எனும் இருவிதையிலைத் தாவரத்தின் மேல் பட்டை தோல் எனும் உறப்புப் பெயரால் குறிக்கப்படுகிறது.

(iv) வீழ் :-

வீழ் என்பது விழுது எனப்படும் புறவேராகும்.

"புல்வீ ழிற்றி" 106 : 1
"வீழ்தாழ் தாழை" 228 : 1

எனும் இவ்வரிகளில் இத்தி, தாழை எனும் இரு தாவரங்கள் வீழ் எனும் உறுப்புப் பெயரால் குறிக்கப்படுகின்றன. தாவர இயலார் பகுப்பின்படி, இத்தி இருவிதையிலைத் தாவரம்; தாழை ஒரு விதையிலைத் தாவரம்.

தொல்காப்பியர் அகக்காழ், புறக்காழ் என்பவற்றின் அடிப்படையில்தான் மரம், புல் என்ற பிரிவையே அமைக்கிறார். காழ் என்பது மரத்தின் உட்பகுதியிலுள்ள வயிரம் என்றழைக்கப்படும் உறுதியான பகுதியாகும்.

மரத்தின் கரிய காழ் உலக்கையாகப் பயன்பட்டது என்பதை,

"கருங்காழ் உலக்கை" 238 : 1

எனும் குறுந்தொகைத் தொடர் உணர்த்துகிறது.

**குறுந்தொகையில் காணப்படும் சிறப்புச் செய்திகள் :-**

தொல்காப்பியர் கூறிய இத்தாவர உறுப்புக்களைத் தவிர ஐம்பதுக்கும் அதிகமான தாவர உறுப்புக்கள் பற்றிய குறிப்புக்கள் குறுந்தொகையில் காணப்படுகின்றன. அவற்றில் சில தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ள உறுப்புப் பெயர்களின் பொருள் கொண்டன.

(i) அடை—இச்சொல் இலை எனும் பொருளுடையது.

(ii) குருத்து, நுசும்பு—இச்சொற்கள் தளிர் எனும் பொருளுடையன.

(iii) கொம்பு, கோடு, கோல், பொங்கர் — இவை சினை எனும் பொருளுடையன.

(iv) அலர், வீ, மலர்—இவை பூ எனும் பொருளுடையன.

(v) போதி, போது, முகிழ், முகை—இவை அரும்பு எனும் பொருளுடையன.

(vi) வாய்—இதழ் எனும் பொருளுடையது.

(vii) இணர், குரல், கோள், துணர்—இவை குலை எனும் சொல்லோடு தொடர்புடையன.

(viii) கனி—பழம் எனும் பொருளுடையது.

(i) (1) **அடை :-**

"பாசடை நிவந்த கணைக்கா னெய்தல்" 9 : 4
"நெடுநீ ராம்ப லடைப் புறத்தன்ன" 352 : 1

இவ்விரு வரிகளிலும் நெய்தல், ஆம்பல் ஆகிய இரு

நீர் வாழ் தாவரங்களின் இலை அடை என்ற சொல்லால் குறிக்கப்படுகிறது.

(ii) (1) குருத்து :-

இது பனையின் தளிர் ஓலையைக் குறிக்கும் சொல், குருத்தோலை என்றே வழங்கப்படுகிறது.

"பனைத்தலைக் கருக்குடை நெடுமடல் குருத்தொடு" 372 : 1

(2) நுகும்பு :-

இது வாழையின் தளிர் இலையைக் குறிக்கும் சொல்.

"சோலை வாழை சுரிநுகும் பினைய" 308 : 1

(iii) (1) கொம்பு :-

"கொன்றை .... கொம்புசேர் கொடியிணரூழ்த்த" 66 : 4

"நொச்சி ... அணிமிகுமென் கொம்பூழ்த்த" 138:4

கொன்றை, நொச்சி ஆகிய தாவரங்களின் கிளைகள் 'கொம்பு' எனும் சொல்லால் குறிக்கப்படுகிறது.

"முல்லைக் கொம்பு" 348 : 3

என முல்லைக் கொடியின் கிளையும் கொம்பு எனும் உறுப்புப் பெயரால் குறிக்கப்பட்டுள்ளன.

2. கோடு :-

"நீடிய மரத்தகோடு" 99 : 4

"வேரு முதலுங்கோடு மொராங்கு பலவின்" 257 : 1

இங்கு மரா, பலா ஆகியவற்றின் கிளைகள் 'கோல்' எனும் பெயரால் குறிப்பிடப்பட்டுள்ளன.

3. கோல் :-

குறிஞ்சி, வாகை ஆகிய தாவரங்களின் கிளைகள் 'கோல்' எனும் பெயரால் குறிப்பிடப்பட்டுள்ளது.

"கருங்கோற் குறிஞ்சி" 3 : 3

"வாகைக் கோலுடை நறுவீ" 347 : 2

4. பொங்கர் :-

"பொங்கர் போந்தென நெற்றுவிளை உழிஞ்சில்"
39 : 1

"பொங்கர் புன்னை" 320 : 6

இத்தொடர்களில் வாகை, புன்னை ஆகிய மரங்களின் கிளைகள் "பொங்கர்" என்ற உறுப்புப் பெயரால் குறிப்பிடப்படுகின்றன.

(iv) 1. அலர் :-

"மாரிப் பீரத் தலர்" 98 : 5
"கோங்கின் தலையலர்" 254 : 3
"விரியலர்ப் புன்னை" 351 : 5
"அழுவநின்ற அலர்வேய் கண்டல்" 340 : 4

இத்தொடர்களில் பீர்க்கு, கோங்கு, புன்னை, தாழை, இவற்றின் பூக்கள் 'அலர்' என்ற சொல்லால் குறிக்கப் படுகின்றன.

2. மலர் :-

"குவளை வண்டுபடு மலர்" 30 : 5
"குவளைக் குறுந்தாணுன் மலர்" 270 : 7
"குவளைத் தண்டுளிக் கேற்ற மலர்" 291 : 8
"நெய்தன் மாமலர்" 397 : 2
"ஆம்பன் மலர்" 84 : 5
"முண்டகக் கூர்ம்பனி மாமலர்" 51 : 1
"ஈங்கைச் செவ்வரும் பூழ்த்த
வண்ணத் துய்ம்மலர்" 110 : 5-6
"பாதிரிக் கூன்மலர்" 147 : 1
"ஆவிரைப் புதுமலர்" 173 : 1
"நறுமலர்ப் புறவு" 220 : 5

"அவரைக்கிளிவா யொப்பி ஞெளிவிடு பன்மலர்"
240 : 2

"வெண் கூதாளத் தந்தூம்பு புதுமலர்" 282 : 6

"புன்னைத் தாதுசேர் நீகர் மலர்" 311 : 6

"அடும்ப விழணி மலர்" 349 : 1

"அடும்பி ஞய் மலர்" 401 : 1

இத் தொடர்களில் குவளை, நெய்தல், ஆம்பல், முண்டகம், ஈங்கை, பாதிரி, முல்லை, அவரை, வெண் கூதாளம், புன்னை, அடும்பு ஆகிய தாவரங்களின் பூக்கள் 'மலர்' என்ற சொல்லால் குறிக்கப்படுகின்றன.

(3) வீ :-

"வேங்கை வீயுகு துறுகல்" 47 : 1

"வேங்கை வீயா மென்சினை வீயுக" 247 : 5

"சிறுவீ ஞாழல்" 50 : 1

"நறுவீ ஞாழல்" 318 : 2, 328 : 1

"நனைமுதிர் ஞாழல் சினை மருதிரள்வீ" 397 : 1

"செவ்வீ மருது" 50 : 2

"பசுவீ முல்லை" 62:1

"சிறுவீ முல்லை" 348 : 3

"கொன்றையம் பசுவீ" 183 : 1

"கொன்றை யொள்வீ" 233 : 2

"பல்வீ பட்ட பசுநனைக் குரவம்" 341 : 1

"வாகைக் கோலுடை நறுவீ" 347 : 2

"வேள்வீத் தாழை" 133 : 4

"வெண்டோ டிரியும் வீததைக் கானற்
கைதை" 304 : 6

இவ் வரிகளில் வேங்கை, ஞாழல், மருது, முல்லை, கொன்றை, குரவம், வாகை, தாழை ஆகியவற்றின்

பூ 'வீ' என்னும் உறுப்புப் பெயரால் குறிப்பிடப் பட்டுள்ளது.

v. (1) பொதி :-

கரும்பின் மொட்டு 'பொதி' என்னும் சொல்லால் அழைக்கப்படுகிறது.

"கரும்பின் கூம்பு பொதியவிழ்" 35 : 3

2. போது :-

இதுவும் அரும்பைக் குறிக்கும் ஓர்சொல்.

"நீலப் பைம்போது" 110 : 3

"போதீன் கொன்றை" 148 : 3

"போதவிழ் பொன்னிணர் ...... புன்னை" 320 : 5

"வெட்சி ...... தழையவிழ் பல்போது கமழும்" 209 : 6

இங்கு நீலம், கொன்றை, புன்னை, வெட்சி ஆகியவற்றின் அரும்பு 'போது' என வழங்கப்படுகிறது.

3. முகிழ் :-

"குவி முகி ழெருக்கு"

என எருக்கின் அரும்பு 'முகிழ்' எனும் சொல்லால் குறிக்கப்படுகிறது.

4. முகை :-

"எதிர் முகைப்பசுவீ முல்லை" 62 : 1

"முல்லைத் ........ தொகுமுகை" 126 : 4

"முல்லை சிறு வெண்முகை" 162 : 4

"முகை முற்றினவே முல்லை" 188 : 1

"இன்று முல்லை முகை நாறும்மே" 193 : 6

"குறுமுகை யவிழ்ந்த நறுமலர்ப் புறவு" 220 : 5

"முல்லை சிறுபசு முகை" 221 : 5

''முல்லைப் பசுமுகை'' 323 : 5.
''முல்லை மென்முகை'' 358 : 7
''முல்லை முகைதலை திறந்த நாற்றம்'' 382 : 2
''மாரிப் பித்திகத்து நீர்வார் கொழுமுகை'' 370:1
''மென்முகை யவிழ்ந்த கோங்கு'' 254 : 2
''காந்தளங் கொழுமுகை'' 265 : 1
''தாழை யூழுறு கொழுமுகை'' 228 : 1

மேலே குறிப்பிட்டுள்ள பாடலகளில் முல்லை, பித்திகம், தாமரை, ஆம்பல், கோங்கு, காந்தள், தாழை ஆகியவற்றின் அரும்பு 'முகை' எனக் குறிக்கப்படுகிறது.

(vi) 1. வாய் :-

''காந்தள் கொழுமுகை வண்டுவாய் திறக்கும்''
265 : 1-2

''ஆம்பலணி நிறக் கொழுமுகை
வண்டுவாய் திறக்கும்'' 370 : 1-2

இங்கு காந்தள், ஆம்பல் ஆகிய மலர்களின் இதழ்கள் 'வாய்' எனும் சொல்லால் உணர்த்தப்படுகின்றன.

(vii) 1. இணர் :-

''கொடி யிணரிடை யிடுபு .... .... ....
.. புதுப்பூங் கொன்றை'' 21 : 1-3
''கொடி யிணருழ்த்த கொன்றை'' 66 : 4
''மராஅத் தோங்கல் வெஞ்சினை
வேனி லோரிணர்'' 211 : 4-5
''இணரவிழ் புன்னை'' 299 : 3
''மின்னிணர்ப் புன்னை'' 303 : 6
''பொன்னிணர் மரீஇய புள்ளிமிழ் பொங்கர்ப்
புன்னை'' 320 : 6

"குவி யிணர்த் தோன்றி யொண்பூ" 107 : 1

இங்கு குறிப்பிட்டுள்ள அடிகளில் குலை என்னும் சொல்லின் பொருள் கொண்ட இணர் எனும் உறுப்புப் பெயர் கொன்றை, மரா, புன்னை, காந்தள் (தோன்றி) ஆகிய தாவரங்களுக்கு உறுப்பாக வந்துள்ளமையைக் காண்கிறோம்.

2. குரல் :-

நொச்சி, எருவை, அறுகு ஆகிய தாவரங்கள் குரல் எனும் உறுப்புப்பெயர் கொண்டு வந்துள்ளன. இது 'குலை' என்ற உறுப்புப் பெயரால் தொல்காப்பியர் குறிக்கும் பூங்கொத்தைக் குறிக்கும் ஒரு சொல்.

"மாக்குரல் நொச்சி" 138 : 3
நாட்குரல் எருவை" 170 : 2
"செங்கோற் பதவின் வார்குரல்" 363 : 2

3. கோள்:-

இச்சொல்லும் 'குலை' என்னும் பொருளுடையது. பூங்கொத்தன்றி கனியின் சேர்க்கையையும் குலை என்று குறிப்பிடுவது மரபு. சான்று :- வாழைக்குலை.

"வேர் கோட் பலவு" 18 : 1
"வீழ் கோட் பலவு" 257 : 3
"செறிகோட் பைங்குரல்" 198 : 4

4. துணர் :-

இதுவும் 'குலை' எனும் பொருடைய சொல்லே.

"துணர்த் தேக்கொக்கு" 164 : 2

(viii) 1. கனி :-

"புன்கால் உகாஅத்து
இறவுச்சினை யன்ன நளிகனி" 274 : 1-2

*"பிரம்பின் வரிப்புற விளைகனி"* 91 : 1

*"பூநாறு பலவுக்கனி"* 90 : 1; 373 : 6

'கனி' எனும் சொல் தொல்காப்பியம் கூறும் 'பழம்' என்னும் உறுப்புப் பெயரையே உணர்த்துவதாகும். இங்கு உகா, பிரம்பு, பலா ஆகியவற்றின் பழங்கள் 'கனி' என்று குறிப்பிடப்படுகின்றன,

**பிற தாவர உறுப்புப் பெயர்கள் –:**

தொல்காப்பியர் கூறியுள்ள தாவர உறுப்புப் பெயர்களோ அதன் பொருள் கொண்டதாகவோ அமையாத தாவரப் பெயர்களும் குறுந்தொகையில் உள்ளன.

1. **அரிசி :–**

இச்சொல் விதை என்னும் பொருளுடையது. இன்றைய வழக்கில் இச்சொல் நெல்லின் மணியைக் குறிக்கிறது.

*"அத்த வாகை யமலை வானெற்*
*றரியார் சிலம்பி னரிசி யார்ப்ப"* 369 : 1-2

இங்கு வாகை மரத்தின் விதை அரிசி என்ற சொல்லால் குறிப்பிடப்படுகிறது.

2. **விதை :–**

*"விதைக்குறு வட்டி"* 155 : 2

என்னுமிடத்தில் விதை எனும் சொல்லும் குறிப்பிடப்படுகிறது. இங்கு எந்தத் தாவரத்தின் விதையும் குறிப்பாகச் சுட்டப்படவில்லை.

மரத்தின் அடிமரம் (trunk) அரை, தாள். நிலை, முதல் என்னும் சொற்களால் குறிக்கப்படுகிறது.

3. அரை :-

"யாஅத்துப் பொரியரை" 255 : 1-2

"புல்லரை யுகாய்" 363 : 4

இங்கு யா, உகா ஆகிய மரங்களின் அடிமரம் 'அரை' எனும் பெயரால் குறிக்கப்படுகிறது.

4. தாள் :-

"பொரிதா ளோமை" 79 : 2

"புன்று ளோமை" 260 : 8

"நெடுந்தாள் வேங்கை" 134 : 3

"நெரிதாள் வேங்கை" 208 : 2

ஓமை, வேங்கை ஆகியவற்றின் அடிமரம் 'தாள்' என்ற சொல்லால் குறிக்கப்படுகிறது.

5. நிலை:-

கொன்றை, தாழை இவற்றின் அடிமரம் 'நிலை' எனப்படுகிறது.

"தடவு நிலைக் கொன்றை" 66 : 8

"தடவு நிலைத் தாழை" 219 : 6

6. முதல் :-

இச்சொல்லும் அடிமரத்தைக் குறிப்பதே.

"யாஅ...... ...முழுமுதல்" 255 : 2

"வேறு முதலுங் கோடும் ...... வீழ்கோட் பலவு"
257 : 1

"முழ்வு முதலரைய தடவுநிலைப் பெண்ணை"
301 : 1

யா, பலா, பனை ஆகியவற்றின் அடிமரம் 'முதல்' என்றழைக்கப்படுகிறது.

**தாவரங்களின் காய்ந்த கொம்பு உலவை, கோல் எனப் படுகிறது.**

7. உலவை :-

"பொரிதா ளோமை வளிபொரு நெடுஞ்சினை
அலுங்கலுலவை'' 79 : 2-3.

என்னும் அடிகளில் ஓமை மரத்தின் உலர்ந்த கொம்பு 'உலவை' எனப்படுகிறது.

8. கோல் :-

"சிறுகோல் குடம்பை'' 301 : 2

பறவைகள் கூடுகட்டப் பயன்படுத்தும் காய்ந்த கொம்புகளைக் 'கோல்' எனும் சொல் குறிக்கிறது.

9. ஒசியல் :-

மரத்தின் ஒடிந்த் கிளை 'ஒசியல்' எனப்படுகிறது.

"நாருடை ஒசியலற்றே'' 112 : 4

10. கதிர் :-

தானியங்களின் கனிக்குலைகள் 'கதிர்' எனப்படுகிறது.

"ஆய்கதிர் நெல்'' 238 : 2
"கதிரொடு'' 296 : 4

11. குரல் :-

தினையின் கதிர் 'குரல்' என்ற சொல்லால் குறிக்கப் படுகிறது.

"பொன்போற் சிறுதினைக்
கடியுண் கடவுட் கிட்ட செழுங்குரல்'' 105 : 1-2
"செந்தினை
மடப்பிடித் தடக்கை யன்ன பால்வார்பு
கரிக்குரற் றிரைஞ்சிய செறிகோட் பைங்குரல்''
198 : 2-4

"பிறங்கு குரல் இறடி"  214 : 2
"பெருங்குர லேனல்"  360 : 5

12. கருக்கு :-

பனை மடலின் ஓரத்தில் வாள் போன்று கறுப்பாக அமைந்த பகுதி 'கருக்கு' எனப்படும். பனை மட்டை- 'கருக்கு மட்டை' என வழங்கப்படுகிறது.

"பைங்காற் கருக்கின்
கொம்மை போந்தை"  281 : 1-2
"பனைத்தலை கருக்குடை நெடுமடல்"  372 : 1

13. கால் :-

இது பூங்காம்பினைக் குறிக்கும் சொல்.

"கணைக்கா னெய்தல்"  9 : 4
"திரள்கா லாம்பல்"  178 : 2
"மாக்கொடி யறுகை
பிணிகான் மென்கொம்பு"  256 : 1–2

14 காழ் :-

"முளிவெதிர் நோன்காழ்"  304 : 2

எனும் அடியில் உலர்ந்த மூங்கிலின் வலிய காம்பு குறிப்பிடப்படுகிறது.

15. தாள் :-

இலையின் அடிப்பாகங்கள் இணைந்து உருவாகும் தண்டு தாள் என்ற சொல்லால் குறிக்கப் படுகிறது.

"பைந்தாட் செந்தினை"  198 : 2
"குவளைக்..........குறுந்தா ணன்மலர்"  270 : 7

16 கிழங்கு -:

"பழங்குழி யகழ்ந்த கானவன் கிழங்கினெடு"
372 : 9

எனக் கிழங்கு குறுந்தொகையில் குறிப்பிடப்படுகிறது. கிழங்கு என்பது தாவரங்கள் உணவினைச் சேகரிக்கும் வேர்ப்பகுதியாகும்.

17. கொங்கு:-

பூவின் மகரந்தம் கொங்கு என்ற சொல்லால் குறிப்பிடப்படுகிறது.

"கொங்கு தேர் வாழ்க்கை" 2 : 1

எனும் தொடரில் வண்டு மகரந்தத்தை ஆராய்ந்து உண்ணும் என்ற செய்தியைத் தருகிறூர் ஆசிரியர்.

"கொங்கு முதிர் முண்டகம்" 46 : 1

"குண்டுநீர்த் தாமரைக் கொங்கு" 300 : 3.

இவ்விரு தொடர்களிலும் முறையே முண்டகம், தாமரை ஆகிய மலர்களின் மகரந்தம் பற்றிய குறிப்பு உள்ளது.

18. தாது :-

இதுவும் மகரந்தத்தைக் குறிக்கும் சொல்லே. பூவின் மகரந்தம் பயறு போல் கொத்தாக அமைந்திருக்கும் செய்தி

"பயறுபோ லிணர பைந்தாது"

என்ற தொடரில் கூறப்பட்டுள்ளது.

"மாச்சினை நறுந்தாது கொழுதும் பொழுது"
192 : 5

"மாஅத்துத் தாதமர் பூ" 306 : 4

"புன்னைத் தாதுசேர் நிகர் மலர்" 311 : 6

"முல்லைப் பசுமுகைத் தாது" 323 : 5

"காந்தள் நறுந்தாது" 239 : 4

இவ்வடிகளில் மா, புன்னை, முல்லை, காந்தள், ஆகிய வற்றின் தாது பற்றிய செய்தி கூறப்படுகிறது.

19. கொம்பு :-

"மாக் கொடி யறுகை
பிணிகான் மென் கொம்பு" 256 : 1-2

20. கோல் :-

இவ்வரிகளில் அறுகின் தண்டு – 'கொம்பு' எனும் சொல்லால் உணர்த்தப்படுகிறது.

"செங்கோல் பதவு" 362 : 2

எனும் இத்தொடரில் அறுகின் தண்டு – கோல் எனும் பெயரால் குறிப்பிடப்படுகிறது.

21. சாம்பல் :-

இது வாடிய பூவினைக் குறிக்கும் சொல். ஆம்பலின் காய்ந்த பூ குறுந்தொகையில் சாம்பல் என்ற சொல்லால் குறிக்கப் படுகிறது.

"ஆம்பற் பூவின் சாம்பலன்ன" 46 : 1

22. செம்மல் :-

இச்சொல் பழம்பூவை உணர்த்துவது.

"மருதின் செம்மல்" 50 : 2

23. சுளை :

பலாப் பழத்தினுள் காணப்படும் இனிமையான பகுதி சுளை எனும் உறுப்புப் பெயராகக் கூறப்படுகிறது.

"கமழ் சுளைப் பெரும் பழம்" 342 : 1

மரங்களின் பட்டை ததரல், நார் என்ற சொற்களால் குறிப்பிடப் படுகின்றன.

24. ததரல் :-

"பருப் பெருந்ததரல்" 213 : 3

இங்கு பருத்த பெரிய மரப்பட்டை 'ததரல்' எனப் படுகிறது.

25. நார் :-

இச்சொல்லும் மரத்தின் பட்டையைக் குறிப்பதே.

"நாருடை ஒசியல்" 112 : 4

"நீர்நசை வேட்கையி னார்மென்று தணியும்" 274 : 5

இவ்விரு வரிகளிலும் நார்—மரப்பட்டை எனும் பொதுவான பொருளைக் குறிப்பதாக உள்ளது.

"முருக்கி னன்னார் களைந்து" 156 : 2

"யாஅத் தொலையக் குத்தி
வெண்ணார் கொண்டு" 307 : 6-7

எனும் இவ்விரு தொடரிலும் முருக்கு, யா ஆகிய மரங்களின் பட்டை 'நார்' என்று குறிப்பிடப் பட்டுள்ளது.

26. தழை :-

இது ஆடையாகப் பயன் பட்ட இலைகளைக் குறிக்கும் சொல்.

"வெள்ளாம்ப லம்பகை நெறித்தழை" 293 : 5

"குவளைத் தண்டழை" 342 : 5

இவ்விரு இடங்களிலும் ஆம்பல், குவளை ஆகியவற்றின் தழை குறிக்கப்படுகிறது.

"பசுந்தழை" 294 : 7

"நறுந்தழை" 333 : 3

"தழையணி மகளிர்" 125 : 3

"தழையணி அல்குல்" 159 : 1; 214 : 4

எனும் இத்தொடர்களெல்லாம் மகளிர் தழையை அணிந்த செய்தியைத் தருகிறது.

27. நுங்கு :-

பனையின் முற்றாத காய் 'நுங்கு' எனப்படுகிறது.

"பெண்ணை நுங்கொடு பெயரும்" 293 : 3

மரங்களின் உலர்ந்த காய் நெற்று, வத்தல் என்னும் பெயர்களால் அழைக்கப்படுகிறது.

28. நெற்று -:

"வாகை வெண்ணெற்று" 7 : 5
"நெற்றுவிளை உழிஞ்சில்" 39 : 2
"வாகை யமலை வானெற்று" 369 : 1

எனும் தொடர்களில் வாகையின் ஒலியிடும் உலர்ந்த காய் குறிப்பிடப்படுகிறது.

29. வற்றல் :-

"உழிஞ்சில் வற்றல்" 39 : 2

என்னும் தொடரிலும் வாகையின் உலர்ந்த காய் 'வற்றல்' என்னும் பெயரால் அழைக்கப்படுகிறது.

30. பஞ்சி :-

பஞ்சி என்ற சொல் பனை, தென்னை ஆகியவற்றின் காயின் நாரை உணர்த்துகிறது.

"பாளை தந்த பஞ்சியங் குறுங்காய்" 293 : 2

என்னுமிடத்து பனங் காயின் நார் குறிக்கப்படுகிறது.

31. பஞ்சு :-

பருத்திச் செடியின் விதையின் வெளிப்புறத்தில் ஒட்டியிருக்கும் பகுதி 'பஞ்சு' என்று குறிப்பிடப்படுகிறது.

"பஞ்சு வெண்திரி" 353 : 5
என்ற ஓரிடத்தில் பஞ்சு பற்றிய குறிப்பு வந்துள்ளது.

32. பாவை :-

வரகுக் கதிரின் தாள் 'பாவை' எனும் சொல்லால் குறிக்கப்படுகிறது.

"வரகின் இரலை மேய்ந்த குறைத்தலைப்பாவை"
220 : 2

அறுகின் தண்டையும் 'பாவை' என்ற சொல்லால் குறிப்பிடும் மரபு இருந்த நிலையை அகநானூற்றுப் பாடலடிகளும் சுட்டுகின்றன.

"பதவின் பாவை முனைஇ மதவு நடை
அண்ண லிரலை யமர்பிணை தழீஇ"
(அகம் 23 : 7–8)

"பழங்கன்று கறிக்கும் பயம்பம லறுகைத்
தழங்குரல் வானின் றலைப்பெயர் கீன்ற
மண்ணுமணி யன்ன மாயிதழ்ப் பாவை"
(அகம் 136 : 11-13)

33. முள் :-

தாவர இனம் விலங்கினங்களால் முற்றிலும் அழிக்கப்படாமலிருக்கக் கொண்டுள்ள மாறுபாடுகளுள் ஒன்றே 'முள்'.

"கூன்முள் முண்டகம்" 51 : 1
"நுண் முளிங்கை" 110 : 5
"கவைமுட் கள்ளி" 174 : 2
"முன்னிலைத் தடவு நிலைத்தாழை" 219 : 5–6
"முள்ளிலம் பணை மூங்கில்" 21 : 5
"நெருஞ்சி கட்கின் புதுமலர் முட்பயந்தாங்கு"
202 : 3

முண்டகம், ஈங்கை, கள்ளி ஆகிய தாவரங்களின் தண்டுப் பகுதியில் முள் காணப்படும். தாழையின் இலை முள் உடையது. மூங்கிலின் தண்டில் முள் காணப்படுமெனினும் சில இனங்களில் முள் இல்லை என்பதை 'முள்ளிலம் பணை மூங்கில்' என்னும் தொடர் குறிக்கிறது. நெருஞ்சியின் மலரே காயாகி, அதுவே முள்ளாகமாறி விடுகிறது என்ற சிறப்பான செய்தியும் குறுந்தொகையில் காணப்படுகிறது. நெருஞ்சியின் முள் அதன் காயில் உள்ளது.

34. முளை :-

விதையிலிருந்து முளைத்து வரும் இளம் தண்டே 'முளை' எனப்படுகிறது.

"முளைவா ளெயிற்றள" 119 : 3

"நாகுபிடி நயந்த முளைக்கோடு" 346 : 1

எனும் இத்தொடர்களில் நாணல், மூங்கில் ஆகியவற்றின் முளை குறிக்கப்படுகிறது.

35. வேர் :-

தாவரங்கள் தரையில் உறுதியாக நிற்பதற்கு உதவுவது வேர்.

"வேர் கோட் பலவு" 18 : 1

"இற்றிக் கல்லிவர் வெண்வேர்" 106 : 1

"கண்டல் வேர்" 117 : 3

"ஞாழல் வேர்" 328 : 1

இங்கு பலா, இற்றி, தாழை, ஞாழல் ஆகியவற்றின் வேர் குறிக்கப்படுகிறது.

36. பொத்து :-

மரத்தண்டில் காணப்படும் வெற்றிடமே 'பொத்து' எனக்குறிக்கப் படுகிறது.

"பொத்தில் காழவத்த யாஅ" 255 : 1

37. குமரி :-

குமரி என்ற சொல் இளம் செடியைக் குறிக்கிறது.
"குமரி வாகை" 347 : 2

இங்கு வாகையின் சிறிய செடி 'குமரி' என்ற சொல்லால் குறிக்கப்படுகிறது.

குறுந்தொகையில் 74 தாவர உறுப்புப் பெயர்கள் குறிக்கப் பட்டுள்ளன. அவற்றில் தோடு, மடல், இதழ், பாளை, குலை, இலை, தளிர், குழை, பூ, அரும்பு, காய், பழம், தோல், குருத்து, கொம்பு, மலர், பொதி, கனி, அரிசி, விதை, கோல், கதிர், கருக்கு, தாள், கிழங்கு, தாது, சுளை, நார், தழை, நுங்கு, நெற்று, பஞ்சு, முள், முளை, வேர் என்னும் 35 உறுப்புப் பெயர்களும் இன்றும் அதே பொருளில் வழக்கில் உள்ளவை. முறி, சினை, நனை, வீழ், அடை, நுகுங்கு, கோடு, பொங்கர், அலர், வீ, போது, முகிழ், முகை, வாய், இணர், குரல், கோள், துணர், அரை (அடிமரம்), தாள், நிலை, முதல், உலவை, கோல் (அறுகின் தண்டு), கொம்பு, ஒசியல், குரல், கால், காழ், கொங்கு, சாம்பல், செம்மல், ததரல், வற்றல், பஞ்சி, பாவை, பொத்து, குமரி என்னும் 39 சொற்களும் தாவர உறுப்புப் பெயர்களாக இன்றைய சாதாரணப் பேச்சு வழக்கில் இல்லை. சில வேறு பொருட்களைக் குறிக்கப் பயன்படுகின்றன. 'வீழ்' என்ற சொல் 'விழுது' எனவும், 'பொத்து' என்ற சொல் 'பொந்து' எனவும் இன்றைய வழக்கில் மாறியுள்ளன.

தமிழ்ச் சொல்லகராதியில் கொம்பு, கோல் என்னும் சொற்களுக்கு மரக்கிளை என்னும் பொருள் உள்ளது. குறுந்தொகையில் கொம்பு எனும் சொல் 'தண்டு' என்ற பொருளிலும் வந்துள்ளது. கோல் என்னும் சொல் புல்லின் தண்டு, உலர்ந்த கிளை ஆகியவற்றையும் உணர்த்துகிறது. ததரல், நிலை, பஞ்சி, பாவை, வாய் ஆகிய தாவர உறுப்புப் பெயர்கள் சொல்லகராதியில் குறிப்பிடப்படவில்லை.

மேலே குறிப்பிட்ட தாவர உறுப்புப் பெயர்களில் வீழ், பொதி, வாய், அரை, தாள் (அடிமரம்), முதல், தாள் (இலையின் அடிப்பாகம் இணைந்து உருவாகும் தண்டு), வற்றல் ஆகியவை காரணப் பெயர்கள். தளிர், அலர், மலர், முகிழ், இணர், முளை, ஆகிய பெயர்கள் வினையின் அடிப்படையில் தோன்றியனவா? வினை இப்பெயர்களி லிருந்து தோன்றியதா? என்பது தெளிவாக அறிய இயலாததாக உள்ளது.

குறுந்தொகையில் பயின்று வரும் தாவர உறுப்புப் பெயர்களில் 'மடல்', 'பாளை' என்னும் இரண்டும் பாமே குடும்பத்துத் தாவரங்களுக்கு மட்டுமே உறுப்பாய் கூறப் படுவதாகும். 'நுகும்பு' என்னும் பெயர் வாழையின் குருத்திலைக்கு மட்டுமே வருவது. கிராமினே குடும்பத் தாவரங்களின் பூ மொட்டு 'பொதி' என்ற உறுப்புப் பெயரால் குறிக்கப்படுகிறது. 'குரல்' என்னும் பெயர் தினைக் கதிரை மட்டுமே குறிப்பது. 'கருக்கு' — பனை ஓலையின் ஓரத்தில் 'வாள்போல அமைந்த பகுதியையும், 'நுங்கு' – பனையின் முற்றாத காயையும் மட்டுமே குறிக்கப் பயன்படும் பெயர்களாம். 'பஞ்சி' என்னும் பெயர் தென்னை, பனை ஆகிய மரங்களின் காயின் மேல் காணப் படும் நாரைக்குறிப்பதாகும். 'பாவை' எனும் பெயர் வரகுக் கதிரின் தாளை மட்டுமே உணர்த்துவதாகும்.



# 3

## திருவாசகத்தில் சிவனும் தாவரங்களும்

மாணிக்கவாசகராகிய திருவாதவூரடிகளால் திருவாய் மலர்ந்தருளப்பெற்ற சிறப்புடையன திருவாசகமும் திருக்கோவையாரும் ஆகும். திருப்பெருந்துறையில் சிவபெருமானே அருட்குருவாக வந்து உபதேசிக்கப்பெற்ற திருவாதவூரடிகள், தம்பொருட்டு மதுரையில் குதிரைச் சேவகனாக எழுந்தருளிய சிவபெருமான் வழங்கிய பேரானந்தமாகிய திருவருளின்பத்தைத் தமது திருவாசகப்பனுவலில் பாடி வைத்தார். அவருக்கு ஞானகுருவாகிய சிவபெருமானின் மேனி, பாதம் எல்லாமே மலராகவே காட்சியளிக்கின்றன. சிவன் தலையில் அணிந்துள்ள மலர்கள் அனைத்தும் மகிழ்ச்சி தருகின்றன. இறைவழிபாட்டில் முக்கியம் வாய்ந்தவை தாவரத்தின் சிறப்பை வெளிப்படுத்தும் மலர்களேயாகும்.

*"பொன்பூத்த நறவிதழி புரிசடைமேற் புனைந்து*
*புனல் அறுகு வெள்ளெருக்கம் பூச்சூடி நளின*
*மின்பூத்த கருங்குவளை பசுங்குமிழ்செங் காந்தள்*
*வெண்முல்லை அரக்காம்பல் இடப்பாகம் பூத்து*
*முன்பூத்த புண்டரிகம், வெண்தளவம் இரண்டு*
*முகமலர இமையவர்கள் அகமலர முகுந்தன்*
*தன்பூத்த திருவுந்தி அயன்பரவக் கனக*
*சபையில் நட மிடுகடவுள் சரணமலர் சரணம்"*

(புட்பவிதி : 1)

என்னும் பாடல் சிவனுக்கும் மலருக்கும் உள்ள தொடர்பினை விளக்குகிறது. சிவன் தன் சடையில் அறுகு, கொன்றை, வெள்ளெருக்கு ஆகிய மலர்களை அணிந்துள்ளான். சிவனது கண் தாமரை மலராகவும் நகை முல்லை மலராகவும் காட்சியளிக்கின்றன. இடப்பாகத்தில் காட்சி தரும் உமையின் கண் குவளை, தாமரை மலர்களையும், மூக்கு குமிழ் மலரினையும் நிகர்த்தன. கை-காந்தள் மலராயும், பல முல்லை மலராயும், இதழ் செவ்வாம்பலாகவும் காட்சி தருகின்றன.

மலரை விரும்பும் இறைவன் தெங்கு திரள் சோலையில் நீலமலர்களும் தாமரை மலர்களும் மலர்ந்து மணங்கமழும் வயல் சூழ்ந்த திருப்பெருந்துறையில் மலர் நிறைந்த ஓர் குருந்த மரத்தடியைத் தன் இருப்பிடமாகக் கொண்டார். மலர் நிறைந்து மணங்கமழாநின்ற அக்குருந்த மரத்தடியில் இருந்து அருளிச் செய்த சிவனை,

*''திருப்பெருந்துறையில் நிறைமலர்க்*
*குருந்த மேவியசீர்''* (அருட்பத்து 1 : 3)

*''திருப்பெருந்துறையில் செழுமலர்க் குருந்தமே வியசீர்''*

(அருட்பத்து, பாடல்கள் 2-10 : 3)

என்று அழைக்கிறார். திருப்பெருந்துறையில் குருந்த மரத்தடியில் இருந்த அவரே திருவெண்காட்டில் விருந்தினனாக இருந்தாரெனவும் கூறுகிறார்.

*"விருந்தினனாகி வெண்காடதனில்*
*குருந்தின் கீழன் றிருந்த கொள்கையும்''*

(கீர்த்தித் திருவகவல் 60-61)

குருந்த மரத்தடியில் இருந்த இறைவன் தானே கல்லால மரநிழலில் அமர்ந்து அருந்தவராம் நால்வர்க்கும் நான்மறைப்பொருளும், இயக்கிகள் அறுவர்க்கும், வெள்ளையானைக்கும் அருளும் அளித்தார் என்பதை,

"அன்ருலின் கீழிருந்தங் கறமுரைத்தான்"
(திருச்சாழல், 16 : 2)
"அன்ருல நீழற்கீழ் அருமறைகள் தானருளி"
(திருப்பூவல்லி, 13 : 1)
"இத்தி தன்னின் கீழிரு மூவர்க்
கத்திக் கருளிய அரசே போற்றி"
(போற்றித்திருவகல், 162 - 163)

என்னும் அடிகளில் மாணிக்கவாசகர் உணர்த்துகிருர்.

சிவன் தலையில் சூடுவனவற்றுள் சிறப்பானவை கொன்றை, மத்தம், மந்தாரம், கூவிளம், கொக்கிறகு எனும் ஐந்து மலர்களுமாம்.

"கொன்றை மதியமும் கூவிள மத்தமும்
துன்றிய சென்னியர்" (அன்னைப்பத்து, 10:1-2)
"வட்டமலர்க் கொன்றை பாடி மத்தமும் பாடி"
(திருப்பொற்சுண்ணம், 19 : 1)
"கொக்கிறகும் பாடி" (திருத்தெள்ளேணம், 20:1)
"தேனொடு கொன்றை சடைக்கணிந்த
சிவபெருமான்" (திருப்பூவல்லி, 5 : 1)
"விரையார் நறவந்
ததும்புமந் தாரத்தில் தாரம் பயின்றுமந் [தம்முரல்வண்டு
அறும்புங் கொழுந்தேன் அவிர்சடை"
(நீத்தல் விண்ணப்பம், 36 : 2-4)

எனும் வரிகள் சிவன் தலையில் சூடும் ஐந்து மலர்களையும் குறிக்கின்றன.

சிவன்சூடும் மலர்மாலைகள் தாளிஅறுகு, கழுநீர், கொன்றை, மந்தாரம், ஆத்தி, வெட்சி, குருக்கத்தி ஆகியவற்றுலானவை என்பதைக் கீழ்வரும் வரிகள் சுட்டுகின்றன.

''தாளி அறுகின் தாராய்''
(போற்றித் திருவகவல் : 201)

"கழுநீர் மாலைக் கடவுள் போற்றி"
(போற்றித் திருவகவல் : 217)

"சூழ்கொன்றைத் தார் பாடி"
(திருவெம்பாவை, 14 : 3)

"செந்தார்ப் பொழில்புடைசூழ் தென்னன்
பெருந்துறையான்
மந்தார மாலையே பாடுதுங் காண்"
(திருவம்மானை, 15 : 5-6)

"ஆருடை அம்பொன்மேனி" (குயிற்பத்து, 9:4)

"ஆரச்செஞ் சாந்தணி சச்சையனே''
(நீத்தல் விண்ணப்பம், 30 : 4)

"அங்கங் குருகினத்தால்"
(திருவெம்பாவை, 13 : 1)

இம்மாலைகளுள் அவன் உவந்து அணிவது தாளிஅறுகு.

''நாயேனை ஆளுடையான்
தாளிஅறு காம்உவந்த தார்"
(திருத்தசாங்கம், 9 : 3-4)

ஆசையுடன் எழில்பெற அணிவது கழுநீர் மாலை.

"காதலனுகிக் கழுநீர் மாலை
ஏலுடைத்தாக எழிற்பெற அணிந்தும்"
(கீர்த்தித் திருவகவல், 113-114)

மாணிக்கவாசகர் சிவபெருமானின் மேனியை,

"அலங்கலந் தாமரை மேனி''
(நீத்தல் விண்ணப்பம், 29 : 3)

"செந்தாமரைக்கா டனைய மேனி''
(திருச்சதகம், 26 : 4)

"செச்சை மலர் புரை மேனியன்"
(உயிருண்ணிப்பத்து 9 : 3)

"செச்சைமா மலர் புரையும் மேனி"
(திருச்சதகம், 29 : 4)

எனத் தாமரை மலர், தாமரைக்காடு, வெட்சிமலர் ஆகிய வற்றின் நிறம் வாய்ந்தது என்கிறார்.

"மலர்க் கமல பாதனே" (திருச்சதகம், 93 : 2)

"செங்கமலப் பொற்பாதம்"
(திருவெம்பாவை, 17 : 3)

"நாட்கொண்ட நாண்மலர்ப் பாதம்"
(திருப்பொற்சுண்ணம், 8 : 3)

"இன்னியல் செங்கழுநீர் மலர்"
(திருப்படையாட்சி 4 : 4)

என்று சிவனின் பாதங்கள் தாமரையும் அன்றலர்ந்த மலரும் செங்கழுநீர் மலரும் போன்றதெனக் கூறியதோடு நில்லாமல் அவை தளிர் போன்றவை எனவும் கூறுகிறார்.

"விரைமலர்த் திருப்பாத
முற்றிலா இளந்தளிர்" (திருச்சதகம், 34:2-3)

இமையவரின் தலைமீது விளங்கும் இறைவனின் தாமரைத் திருவடியை பிரமனும் திருமாலும் தேடியும் காணார் என்கிறார்.

"இமையோர்
சிரந்தனிற் பொலியும் கமலச் சேவடியாய்"
(கோயில் திருப்பதிகம், 6 : 1-2)

"போற்றிமால் நான்முகனுங் காணாத புண்டரீகம்"
(திருவெம்பாவை 20 : 3)

இறைவன் சிரசில் விளங்குகின்ற மலர்களில் ஊமத்தை மலர் அடியார்க்கு ஆசை மயக்கம் தருவது. நாண்மலரே

அவன் அணிவதால் வண்டுகள் ஒலிக்க அவற்றின் மகரந்த மும் மதுவும் காரணமாகின்றன.

"தாதாடு கொன்றைச் சடையான்"
(திருப்பொன்னூசல், 6 : 2)
"கொங்குலவு கொன்றைச் சடையான்"
(திருப்பொன்னூசல், 9 : 5)
"தேனேயும் மலர்க்கொன்றைச் சிவனே"
(திருச்சதகம், 12 : 3)
"கள்ளும் வண்டும் அறுமலர்க் கொன்றையான்"
(திருச்சதகம், 46 : 2)

மலர் மாலைகளைச் சிரசிலும் தோளிலும் அணிந்தவனும், மலரனைய மேனி கொண்டவனுமான சிவனை, அடியவர்க்ளும் வானவர்களும் எவ்வாறு இறைஞ்சுகிறுர்கள் என்பதையும் ஆங்காங்கே குறிக்கிருர் திருவாதவூரார். அடியவர்கள் நாண்மலர்களையும், மொட்டறு மலர்களையும் தேர்ந்தெடுத்த மலர்களையும் இறைவனுக்குப் படைக்கின்றனர்.

"தாள்தனை யிடுமின்
நாண்மலர்ப் பிணையலின்"
(திருவண்டப்பகுதி, 142 – 143)
"மொட்டறு மலர் பறித்திறைஞ்சி"
(அருட்பத்து 8 : 1)
"தண்மலரிட்டு முட்டா திறைஞ்சேன்"
(திருச்சதகம், 5 : 1)
"பரந்து ஆய்மலர் இட்டுமுட் டாதடி
யேஇறைஞ்சி" (திருச்சதகம், 6 : 1)
"ஏய்ந்த மாமல ரிட்டுமுட் டாததோர் இயல்
பொடும் வணங்காதே" (அற்புதப்பத்து, 2:1)

மலரிட்டுப் பக்தியாய் வணங்கும் அடியவர்க்குப் பரகதி கொடுக்குமாறு சிவனை வேண்டுகிருர்.

"மொட்டறு மலர்பறித் திறைஞ்சிப்
பக்தியாய் நினைந்து பரவுவார் தமக்குப் பரகதி
கொடுத்தருள்" (அருட்பத்து, 8:1-2)

அமரர்களோ பொன்னொத்த மலரினைக் கொண்டு சிவனை வழிபடுகின்றனர்.

"பொன்னேரனைய மலர்கொண்டு போற்றி
நின்றார் அமரரெல்லாம்" (ஆனந்தமாலை, 1:2)

வண்டுகள் ரீங்காரமிடும் தாமரை மலர்களில் உறையும் கலைமகளும் திருமகளும் சோதி வடிவாம் சிவனை மலர்தூவி வழிபடுகின்றனர்.

"நாதம் உடையதோர் நற்கமலப் போதினில்
நண்ணிய நன்னுதலார்
ஓதிப் பணிந்தலர் தூவியேத்த ஒளிவளர்
[சோதியெம் ஈசன்" (திருவார்த்தை, 7:1-2)

கன்றினால் விளவெறிந்த நாராயணன் ஆயிரம் தாமரை மலர் கொண்டு சிவனை அர்ச்சித்தான். ஆயிரத்தில் ஒன்று குறைய ஒரு கண்ணையே மலராகப் படைத்தான். அவ்வாறு செய்த செயலுக்காய்ச் சக்கராயுதத்தை வழங்கினார் ஈசன்.

"பங்கயம் ஆயிரம் பூவினில் ஓர்பூக்குறையத்
தங்கண் இடந்தரன் சேவடிமேல் சாத்தலுமே"
(திருத்தோணோக்கம், 10:1-2)
"நலமுடைய நாரணன்தன் நயனம்இடந்
தரனடிக்கீழ்
அலராக இடஆழி அருளினன் காண்"
(திருச்சாழல், 18:3-4)

மருவார் மலர்க்குழலினையும் புனவேய் அனைய வளைத் தோளினையும் உடைய தன் தேவியாம் உமையை

இடப்பக்கத்தில் உடலில் ஒரு கூருய் அமைத்துக் கொண்ட தால் உமையின் கூறும் ஈசன் கூருய் அமைகின்றது.

"பஞ்சின் மெல்லடியாள் பங்க"
(வாழாப்பத்து, 6:1)
"கொடியே ரிடையாள் கூரு"
(குழைத்தபத்து 2:2)
"கோங்கலர் சேர்குவி முலேயாள் கூரு"
(திருப்புலம்பல், 1:2)
"காவிசேரும் கயற்கண்ணுள் பங்கா"
(பிரார்த்தனேப்பத்து, 5:2)
"மாவடு வகிரன்ன கண்ணி பங்கா"
(அடைக்கலப்பத்து, 8:1)

எனும் இவ்வரிகளில் உமையின் பாதம் பஞ்சைப் போன் றது எனவும், இடை கொடி போன்றது எனவும், நகில் கோங்கலரை ஒத்தது எனவும், கண் காவி மலரனேயது, மாவடுவனேயது எனவும் கூறுகின்ருர்.

மலர்மீது நாட்டம் கொண்ட, மலர் சூடிய சிவன் மலரின் மணம் போல உலகெங்கும் நீக்கமற நிறைந் துள்ளான்.

"பூவின் நாற்றம் போன்றுயர்ந் தெங்கும்
ஒழிவற நிறைந்து மேவிய பெருமை"
(திருவண்டப்பகுதி : 115-116)
"நறுமலர் எழுதரு நாற்றம்போல்
பற்றலாவ தோர் நிலேயிலாப் பரம்பொருள்"
(அதிசயப்பத்து, 9:1-2)

குருந்த மரத்தடியில் அமர்ந்தவனும், கல்லால மரநிழ லில் அறமுரைத்த வேத முதல்வனுமான சிவன் அணியும்

மலர்கள், மலர் மாலைகள், விரும்பி அணியும் மாலைகள், சிவபிரானின் - உடல் - உடலுறுப்புக்கள் மலரினை ஒத்துத் தோன்றுதல், அடியவரும் வானவரும் மலரிட்டு வணங்குதல், தன்னில் பாதியாய் நின்ற உமையின் உடலுறுப்புக்கள் மலரொத்துத் தோன்றுதல் போன்ற செய்திகளைத் திருவாசகத்தில் குறித்துள்ள மாணிக்க வாசகர், "பூத் தேர்ந்து ஆயன கொண்டு", "பரந்து பல்ஆய் மலர் இட்டு", "தண்மலரிட்டு" எனும் தொடர்களால் பூசைக்குப் பயன் படுத்தும் மலர் எங்ஙனம் இருத்தல் வேண்டுமென விதியும் செய்கிறார்.



# 4

## வழிபாட்டில் மலர்கள்

நம் அன்றாட வாழ்வில் பெரும் பங்கேற்கும் தாவரங்களும் அவற்றின் மலர்களும் ஆன்மீக வாழ்விலும் பெரும் பங்கு வகிக்கின்றன என்பது மறுக்கவோ, மறைக்கவோ முடியாத ஓர் உண்மை. இயற்கைப் பொருட்களை வழிபட்ட மனிதன், அதன் ஒரு கூறான தாவரங்களையும் வழிபட்ட நிலை ஒன்று இருந்தது. தான் தெய்வாம்சமாகக் கருதிய மரத்தினைப் பிறர் வெட்டவோ தீட்டுப்படுத்தவோ கூடாது என்பதற்காக அம்மரத்தின் அடியில் ஓர் அடையாளத்தை ஏற்படுத்தினன்; மரத்தடியில் அடையாளமாக வைக்கப்பட்ட வெறும் கல், மரத்துண்டுகள் சிலைகளாக மாறின. காலப்போக்கில் அடையாளமாக வைக்கப்பட்ட பொருட்கள் தெய்வமாக மாறிவிட, மரம் அதனைக் காக்கின்ற – நிழல் தருகின்ற பொருளாக மாறி நின்றது.

மத அடிப்படையில் கோவில்கள் எழுப்பப்பட்டன. எனினும் மரம் அதன் நிலையில் தாழ்ந்துவிடவில்லை. மரத்தடியிலிருந்த உருவம் மூலஸ்தானத்திற்கு மாற்றப்பட்ட நிலையிலும், மாற்றப்படாத நிலையிலும்-அம்மரம் தெய்வீகமாக-அந்தத்தலத்தின் சிறப்புக்களுள் ஒன்றாகக் கருதப்பட்டுவரலாயிற்று. தலத்தின் விருட்சம் தலவிருட்சம் என அழைக்கப்பட்டு, தலச்சிறப்புக்களோடு இணைந்து, தலத்தின் பழமைக்குச் சான்றாய் நிற்கின்ற நிலையை இன்றும் காண்கிறோம்.

சைவம், வைணவம் என்ற வேறுபாடு பெரிதானதைத் தொடர்ந்து, இவ்விரு மதத்துக்குமாகத் தனித்தனியே பல சிறு தெய்வங்கள் கூறப்பட்டன. அத்தெய்வங்களுக் கெல்லாம் மரத்தோடு மலரோடு நெருங்கிய தொடர்பும் கற்பிக்கப்பட்டன. சிவபெருமான் கல்லால மரநீழலில் சனகாதி முனிவர்க்கு அறமுரைத்ததாக முன்னோர் சொல்லிவைத்தனர். திருமால் ஊழிக்காலத்தில் பிரளய வெள்ளத்தில் ஆலிலைமேல் துயில் கொண்டதாகவும் சொன்னார்கள். திருமகள் செந்தாமரையிலும், கலைமகளும் பிரம்ம தேவனும் வெண்டாமரை மலரிலும் வீற்றிருப்பதாக நம்பினார்கள். புத்தர் உண்மை ஞானத்தைத் தேடி அலைந்த போது, அவர் போதி மரத்தடியில் உண்மை ஒளிபெற்றார் என வரலாறு கூறுகிறது. ஜைனர்கள் தங்கள் அருகக் கடவுள் அசோக மரத்தின் தண்ணிழலில் அமர்ந்து அருள் புரிவதாக நம்பினர். சிவபெருமான் கொன்றைப்பூ மாலையையும் முருகப் பெருமான் கடம்ப மாலையையும் அணிந்து விளங்குவதாக நம்மவர்கள் சொல்லுகிறார்கள். நம் முன்னோர் சமயத்தோடும் மூர்த்தியோடும் வழிபாட்டோடும் தாவரத்தை இணைத்துத் தாவரங்கள்பால் தமக்கிருந்த பக்தியை வெளிப்படுத்தினர் என்று கூறலாம்.

இயற்கைப் பொருட்கள் மீது தனக்கிருந்த அச்சம் காரணமாக மனிதன் அவற்றிற்குப் பலிகொடுக்கும் வழக்கத்தை ஏற்படுத்தினான். வைதீக மார்க்கத்தின் உயிர்க் கொலைகளில் நிறைவு காணாத நெஞ்சங்களின் சிந்தனையின் விளைவே புத்த, ஜைன மதங்களின் தோற்றம் எனலாம். புத்த ஜைன மதங்கள் மன்னர்களால் ஆதரிக்கப்பட்ட போது வைதீக சமயங்கள் தாழ்வுநிலை அடைந்தன. தம் சமயங்களின் தாழ்வுநிலை குறித்து சிந்தித்த அம்மதத்தினர் உயிர்ப் பலியினை நிறுத்தி உயிர்ப்பலிக்குப் பதிலாக முழுவதும் தாவரங்களின் காய்கனிகளைப் படைக்கும் ஓர் நிலை ஏற்பட்டது.

வழிபாட்டிற்குரிய ஆகமங்கள் ஏற்பட்ட நிலையில் புட்ப விதிகளும், புட்ப பலன்களும் கூறப்பட்டன.

இறைவர்க்கு உபயோகிக்கக் கூடிய, உபயோகிக்கக் கூடாத மலர்கள் வரையறுக்கப்பட்டன.

"எண்ணில் ஆகமம் இயம்பிய இறைவர் தாம் [ விரும்பும்
உண்மையாவது பூசனை"

என்னும் வாக்கினுல் பூசை சிறப்பானது என்பதை உணர் கிரும். பூசைக்கு முதலில் வேண்டப்படுவது பூ. நீர் கூடப் பூவிற்கு அடுத்ததே என்பதை,

"புண்ணியம் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு"
"போதொடு நீர் சுமந்தேத்திப் புகுவாரவர் பின் புகுவேன்"

என்னும் வாக்குகள் உணர்த்துகின்றன. அபிஷேக நீரைக் கூட முதலில் பூவால் அர்ச்சனை செய்தே அபிஷேகத் திற்குப் பயன்படுத்துவர். அபிஷேகத்திற்கு முன் மூர்த்தி யின் சிரசில் பூவை இட்டு அதன் பிறகே அபிஷேகம் செய்வர். லிங்கத்தின் சிரசில் புஷ்பமில்லாமல் ஒரு போதும் இருக்கக்கூடாது என்று கிரணுகமம் கூறுகிறது.

சிவன் அணியும் மலர்களாக அகத்தி, அடும்பு, அலரி, ஆம்பல், எருக்கு, கரந்தை, கழுநீர், காயா, குரவம், கூவிளம், கொக்கிறகு, கொன்றை, கோங்கு, கோடல், செண்பகம், செருந்தி, தாமரை, தும்பை, துளசி, நந்தி யாவட்டம், நீலமலர், நொச்சி, புனமலர், பூளை, மகிழம்பூ, மத்தம், மல்லிகை, முருக்கு, முல்லை, மூங்கில், வன்னி, வேங்கை எனும் முப்பத்திரண்டினைத் தேவாரம் குறிக்கிறது. திவ்யப்பிரபந்தத்தில் இருவாட்சி, கருமுகை, கோடல், குருக்கத்தி, செண்பகம், செங்கழுநீர், தாமரை, துளசி, பாதிரி, புன்னை, மரிக்கொழுந்து, மல்லிகை, மாதளம்பூ, முல்லை, மௌவல், வேங்கை எனும் பதி ஞறும் திருமாலுக்கு உகந்த மலர்கள் எனக் குறிப்பிடப் பட்டுள்ளன.

ஆகமங்கள் காலை, நடுப்பகல், மாலை வேளைகளில் உபயோகிக்கும் மலர்களையும், முக்கிய காலத்திற்கான புஷ்பங்களையும், எடுக்கப்பட்ட புஷ்பங்களின் உபயோக நாட்களைப் பற்றியும், பூஜைக்குப் பயன்படாத மலர்களையும், பூஜைக்குரிய பத்திரங்கள் பழங்களையும், ஒவ்வொரு தேவர்க்கும் தகாத, ப்ரீதியான புஷ்பங்களையும் பற்றிய செய்திகளைத் தருகின்றன.

காலையில் தாமரை, பொரசம், துளசி, நவமல்லிகை, நந்தியாவட்டை, மந்தாரை, முல்லை, சண்பகம், புன்னாகம், தாழை- இந்தப் பத்து புஷ்பங்களாலும் பூஜிக்க வேண்டும்.

நடுப்பகலில் வெண்டாமரை, அரளி, பொரசு, துளசி, நெய்தல், வில்வம், சங்கபுஷ்பம், மருதாணி. நோவிதாரம், ஓரிதழ் என்ற பத்து புஷ்பங்களாலும் பூஜிக்க வேண்டும்.

மாலையில் செந்தாமரை, அல்லி, மல்லிகை, ஜாதி, முல்லை, மருக்கொழுந்து, வெட்டிவேர், கஜகர்ணிகை, துளசி, வில்வம், எனும் இப்பத்து மலர்களையும் பூஜைக்குப் பயன்படுத்தலாம்.

முக்கிய காலங்களில் காலையில் நந்தியாவட்டையும், மத்தியானத்தில் அரளியும், சாயரட்சையில் மல்லிகையும், அர்த்த ஜாமத்தில் த்விகர்கணியும் முக்கிய புஷ்பங்களாகும் எனக் காரணாகமம் கூறுகிறது.

தாவரத்திலிருந்து எடுக்கப்பட்ட நாளிலிருந்து அரளி, நெய்தல், விஷ்ணுகிராந்தி ஆகிய மூன்று மலர்களும் மூன்று நாட்களும், தாமரையும் தாழம்பூவும் ஐந்து நாட்களும், சண்பகம் ஒரு நாளும், துளசி மூன்று மாதமும், வில்வம் ஆறு மாதமும் பூஜைக்குப் பயன்படுத்தப்படுவனவாயிருக்கும். விளாமிச்சையை எல்லா நேரத்திலும் பயன்படுத்தலாம்.

கையில் கொண்டு வந்தது. தானாக விழுந்தது, கொட்டை இலை, எருக்க இலைகளில் கொண்டு வந்தது, வாசனை இல்லாதது, மரப்புழு இவைகளால் தூஷிக்கப் பட்டது, கடும் வாசனையுடையது, வாடினது, தகாதவர் களால் தொடப்பட்டது, நுகரப்பட்டது, தன்னால் மலரச் செய்யப்பட்டது, அசுத்தமான பாத்திரத்தில் கொண்டு வரப்பட்டது, ஈரவஸ்திரத்துடன் கொண்டு வரப்பட்டது, யாசிக்கப்பட்டது, காய்ந்தது, பழையது, பூமியில் விழுந் தனவுமான புஷ்பங்கள் பூஜைக்கு ஆகாதவை என்று காரண கமம் கூறுகிறது. சண்பகம், சமாக்கு தவிரப் பிற மலர் மொக்குகளும் பூஜைக்கு ஆகா.

புஷ்பத்தைக்கிள்ளக்கூடாது. சேதம் செய்யக்கூடாது. புஷ்பத்தைக் கிள்ளுவது துர்ப்பாக்கியம். சேதம் செய்தால் பிரும்மஹத்தி தோஷம் உண்டாகும்.

வெண்மை, மஞ்சள் புஷ்பங்கள் விஷ்ணுவுக்கு விருப்ப மானவை. சிகப்பு புஷ்பம் சூரியன், கணபதி ஆகியோ ருக்கு விருப்பமானவை. அக்ஷதை, வெள்ளெருக்கு, ஊமத்தை ஆகியவை விஷ்ணுவுக்குக் கூடாது. செம்ப ரத்தை, தாழம்பூ, குந்தம், கேஸரம், குடஜம், ஜமா புஷ்பம் சிவனுக்குக் கூடாது. அறுகு, வெள்ளெருக்கு, மந்தாரம் அம்பாளுக்குக் கூடாது.

மலராகக் குறிப்பிடப்படும் வில்வம், துளசி, வன்னி போன்றவற்றின் மலர்கள் மிகச்சிறியவை. மலர்களைவிட இலைகளே பூஜைக்குப் பயன்படுத்தப்படுகின்றன. இங்ஙனம் பயன்படுத்தப்படும் இலைகள் பத்திரங்கள் என்று குறிப்பிடப்படுகின்றன. பத்திரங்களும் பூக்களுக்குச்சமமாக மதிக்கப்படும். பூஜைக்குரிய இலைகளும் பூக்களும் 'பத்திர புஷ்பங்கள்' என்று சேர்த்தே குறிப்பிடப்படுவது இதனை வலியுறுத்தும்.

பூஜைக்குரிய பத்திரங்கள் என துளசி, முகிழ், சண்பகம், தாமரை, வில்வம், கல்ஹாரம், மருக்கொழுந்து, தர்ப்பை, அறுகு, நாயுருவி, விஷ்ணுகிராந்தி, நெல்லி ஆகியனவற்றைக் காரணாகமம் குறிப்பிடுகிறது. பத்திரங்கள் மலர்களைப் போலல்லாது எல்லாக்காலத்திலும் எல்லா நாட்களிலும், எப்பொழுதிலும் எளிதில் கிடைப்பதாகும். பத்திரத்தைக் கிள்ளலாம். அதனைக் கிள்ளுவது சத்ருநாசம் விளைக்கும். வாரத்தின் ஏழு நாட்களுக்கும் அவ்வந் நாட்களில் பயன்படுத்தக்கூடிய பத்திரங்கள் இவை இவை யென முன்னோர் வகுத்துள்ளனர்.

ஞாயிறு — வில்வம்
திங்கள் — துளசி
செவ்வாய் — விளா
புதன் — மாவிலிங்கை
வியாழன் — மந்தாரை
வெள்ளி — நாவற்பத்திரம்
சனி — விஷ்ணுகிராந்தி

இவ்வேழு பத்திரங்களிலும் விளா, மாவிலிங்கை, மந்தாரை, நாவற்பத்திரம் ஆகிய நான்கும் முன்னர் கூறிய பத்திர வகைகளில் குறிப்பிடப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

புட்பபலன் நூலாசிரியார் இவை தவிர நாயுருவி, பூளை, நொச்சி, கரந்தை, கீரை, மாசிப்பச்சை, மலைப் பச்சை, திருநீற்றுப்பச்சை, எலுமிச்சம்பச்சை, சமுத்திரப் பச்சை, கதிர்ப்பச்சை, குடத்தன்குதம்பை, வன்னி, கிளுவை, மாவிலிங்கை, விளா, சந்தனம், மா, எலுமிச்சை, நாரத்தை, நாவல், மருது, இலந்தை ஆகிய இருபத்தி மூன்று வகைப் பத்திரங்களைப் பூஜைக்குரியன என்று கூறுகிறார். அர்ச்சனை, அபிஷேகம் ஆகியவற்றில் தாவரப் பொருட்களான காய் கனிகளுக்கும் முக்கியமான இடம் உள்ளது. நாவல், மாதுளை, எலுமிச்சை, புளி, கொய்யா,

மா, பலா, வாழை, நெல்லி, இலந்தை எனும் பத்துப் பழங்களையும் ஆகமத்தில் குறிப்பிட்டுள்ளனர் முன்னோர். தம்பரத்தம் எனும் த்மரத்தை, கமுகு, பச்சிளநீர், செவ்விளநீர், சூரிய கௌளி இளநீர், சந்திர கௌளி இளநீர், நெற்கதிர், வெண்கரும்பு, செங்கரும்பு ஆகியவற்றின் சாறு, அகில் ஆகியவையும் பூஜைக்குச் சிறப்பானவை என்று கூறுகிறார் புட்பபலன் நூலாசிரியர்.

தேவார, திவ்யப் பிரபந்தப் பாடல் பெற்ற ஆலயங்களில் பயன்படும் பத்திர புஷ்பங்களையும் பழங்களையும் ஆகமங்கள் கூறுபவற்றோடு ஒப்பிட்டுப் பார்ப்பது கால மாற்றத்தினால் ஏற்பட்ட விளைவுகளைக் கண்டுகொள்ள உதவும். ஆகமங்கள் காலை, நண்பகல், மாலை என முக் காலத்துக்கும் தனித்தனியே புஷ்பங்களைக் கூறியிருக்கின்றன. ஆனால் இன்று காலை மாலை என்று மலர்களை வித்தியாசப்படுத்துமளவுக்கு மலர்கள் கிடைப்பதில்லை. அபூர்வமாகச் சில ஆலயங்களில் அர்த்தஜாம பூஜையில் மல்லிகை, முல்லை போன்ற மணமுள்ள—இரவில் மலரும், மலர்களை மட்டும் பயன்படுத்துவது காணலாம்.

தேவாரம் கூறுகின்ற மலர்களில் அலரி, கூவிளம், கொக்கிறகு, கொன்றை, சண்பகம், தாமரை, தும்பை, துளசி, நந்தியாவட்டை, நொச்சி, மகிழ், மல்லிகை, முல்லை, வன்னி என்பன இன்றும் அநேகமாகப் பயன்படுத்தப்படுகின்றன. வெள்ளெருக்கு, கரந்தை, செங்கழுநீர், செருந்தி, நீலமலர், பூளை, கருஊமத்தை என்பன அபூர்வமாகச் சில இடங்களில் மட்டும் இன்றும் பயன்படுத்தப்படுகின்றன.

பிறபூக்களாக பன்னீர், புன்னாகம் எனும் நாகலிங்கம், ஜாதி, மரு, மரிக்கொழுந்து, வெட்டிவேர், ரோஜா, செவந்தி, சம்பங்கி, பவளமல்லிகை எனும் பாரிஜாதம், விருக்ஷி எனும் வெட்சி, மஞ்சள்பட்டி, கஸ்தூரி அரளி வகைகள், செம்பரத்தை, திருஆத்தி போன்ற மலர்களும், அறுகம்புல், நந்தியாவட்டை, கிளுவை போன்ற பத்திரங்க

ளும் பொதுவாகப் பயன்படுத்தப்படுகின்றன. மரமல்லிகை, ரங்கூன் மல்லிகை, மனோரஞ்சிதம், பாதிரி, சங்குபுஷ்பம், மருதாணி என்பவை அபூர்வமாகப் பயன்படுத்தப் படுகின்றன. தேவாரம் கூறும் அகத்தி, அடும்பு, காயா, குரவம், கோங்கு, கோடல், புனமலர், முருக்கு, மூங்கில், வேங்கை என்பவை இன்று பயன்படுத்தப்படவில்லை.

காய்கனி போன்ற பிறதாவரப்பொருட்களில் இளநீர், குங்குமம், சந்தனம், எலுமிச்சை, மா, பலா, வாழை, ஆரஞ்சு, திராட்சை, ஆப்பிள் போன்றவைகள் சாதாரண மாகவும், அகில், நாவல்பழம், மாதுளம் பழம், நெல்லிக் காய், இலந்தை, கொய்யா போன்றவை அபூர்வமாகவும் பயன்படுத்தப்படுகின்றன. நெல்லிக்காய் பிறகாய்களைப் போன்று பெரும்பாலும் அப்படியே பயன்படுத்தப்படுவ தில்லை. அக்காய்களை உலர்த்திப் பொடியாக்கி நெல்லி முள்ளி என்ற பெயரில் பிற அபிஷேகப் பொருட்களுடன் பயன்படுத்தப்படுகிறது.

திருமால் கோவில்களைப் பொறுத்தவரையில் திவ்யப் பிரபந்தம் கூறுவனவற்றில் இருவாட்சி, சண்பகம், தாமரை, துளசி, மரிக்கொழுந்து, மல்லிகை, முல்லை போன் றவை பொதுவாகவும், கருமுகை, குருக்கத்தி, செங்கழுநீர், பாதிரி, புன்னை போன்றவை அபூர்வமாகவும் பயன்படுத் தப்படுகின்றன. கோடல், மாதளம்பூ, மௌவல், வேங்கை என்பனவற்றைப் பயன்படுத்துவதே இல்லை. பத்திரங்களில் துளசி அர்ச்சனைக்கும் மாலைக்கும் பயன்படுகிறது. இவை தவிர அபூர்வமாகப் புன்னைப்பத்திரமும் பயன்படுத்தப்படு கிறது. நந்தியாவட்டை, கஸ்தூரி வகைகள், ரோஜா, செவந்தி, ஜாதி, விருக்ஷி, மகிழம், பவள மல்லிகை எனும் பாரிஜாதம், பன்னீர், மரு, போன்ற பிற பூக்கள் மிகுதி யாகவும் மனோரஞ்சிதம், தாழம்பூ போன்றவை அபூர்வ மாகவும் பயன்படுத்தப்படுகின்றன.

மலர்கள் பல கூறப்பட்டனவே இவற்றை எப்படி இறைவனுக்குப் படைப்பது என்று ஐயுறுவோர்க்கு புட்ப பலன் ஆசிரியர்,

" செண்டுமுற் பணித்த யாவும்
சேர்த்தணி தலிற் சிறப்பாம்
மண்டிய மாலை யாவும்
மற்றதில் அதிக மாகும்
எண்டவிர் சரங்க ளெல்லாம்
இவற்றினும் அதிக மாகும்
ஒண்டொடி பாகன் மீதில்
ஒவ்வொன்ருய் அணிதல் மிக்கவாம்"
(புட்ப பலன் : 143)

என்று ஐயமகற்றுகிருர்.

பொதுவாக பூஜைக்குப் பயன்படுத்தும் மலர்களில் துலுக்கச் சாமந்தி விலக்கப்படுகிறது. அதன் துர்வாசனையாலும் அது ஈமச்சடங்குகளிலேயே பெரும்பாலும் பயன்படுத்தப்படுவதாலும், அதன் நச்சுத்தன்மையாலும், அதைச் சாத்தினல் விக்ரகங்களின் மீதுள்ள பட்டுத்துணியினை எலி சேதப்படுத்துகிறது என்பதாலும் அதை உபயோகிப்பதில்லை என்று காரணம் கூறுகிருர்கள். இப்போது அறநிலைய ஆட்சித்துறையினர் அதனை உபயோகிக்கக் கூடாது என உத்தரவும் இட்டுள்ளனர். ஆனுலும் கடையில் வாங்கப்படுகின்ற மாலைகளில் பெரும்பாலும் துலுக்கஞ் சாமந்திப் பூவே அதிகமாக உள்ளது. சேவார்த்திகள் அதனை வாங்கி வரும்போது அர்ச்சகர்கள் அதனைச் சாத்த வேண்டிய நிர்ப்பந்தத்திற்கு உள்ளாகிருர்கள். சிலர் விக்ரகங்களின் பாதத்தில் இட்டு, பின் சேவார்த்திகள் கரங்களில் கொடுத்துவிடுகிருர்கள்.

வாசனை இல்லாததும், கடும் வாசனையுடையதுமான புஷ்பங்களை உபயோகிக்கக் கூடாத புஷ்பங்கள் என்று

கூறுகின்றனர். வாசனை இல்லாத புஷ்பங்களில் கனகாம்பரம், வாடாமல்லிகை போன்றவை பயன்படுத்தப்படுகின்றன. பாம்பின் படமும் அதன் அடியில் லிங்கமும் போன்ற அமைப்புக் கொண்டுள்ளதால் நாகலிங்கப்பூ சிவபூஜைக்குச் சிறப்பானது என்று சிலர் கூற, சிலர் அதனை அதிவாசனையானது என்று விலக்குகின்றனர். வாசனை—அதிவாசனை வேறுபாட்டை எப்படி அறிவது என்று ஐயறும்போது,

"விதியினால் உரைத்த தன்றி
வேண்டிய தேதேர் எல்லாம்
அதிகபத் தியினால் ஈசன்
அடியிணைக் கணிய லாகும்;
பதிபசு பாசம் தேர்ந்தோர்
பகர்மொழி விதியே யாகும்;
கதிதரும் பாசம் நீங்கும்;
கழறெனு முத்தி காட்டும்."

(புட்ப பலன் : 148)

என்ற பாடலின் மூலம் பூவினும் பக்தியே அடிப்படையானது — சிறந்தது என்பது உணர்ந்து அமைதியடையலாம்.



# 5

## நந்திக் கலம்பகத்தில் தாவரங்கள்

சிற்றிலக்கியங்களாவன தமிழ் மொழியில் வழங்கிவரும் பிரபந்தங்களாகும். பிரபந்தம் எனப்படும் இச்சிற்றிலக்கியங்கள் தொண்ணூற்ருறு வகைப்படும் என்பர். அவற்றுள் ஒன்று கலம்பகமாகும். கலம்பகம், ஒரு மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா, வெண்பா, கட்டளைக் கலித்துறை என்னும் செய்யுட்களை முதலில் பெற்று, புயவகுப்பு, மதங்கு, அம்மானை, காலம், சம்பிரதம், கார், தவம், குறம், மறம், பாண், களி, சித்து, இரங்கல், கைக்கிளை, தூது, வண்டு, தழை, ஊசல் என்னும் பதினெட்டு உறுப்புக்களை உடையதாய்ப் பலவகைப் பாக்களாலும் இனங்களாலும், நூல் முழுதும் அந்தாதித் தொடையாய் வரப் பாடப்படுதல் வேண்டும் எனவும், கலம்பகங்களின் செய்யுள் தொகை கடவுளர்க்கு நூறு, முனிவர்க்குத் தொண்ணூற்றைந்து, அரசர்க்குத் தொண்ணூறு, அமைச்சர்க்கு எழுபது, வணிகர்க்கு ஐம்பது, வேளாளர்க்கு முப்பது என்ற அளவில் அமைதல் வேண்டும் எனவும் விதிவகுப்பர் பாட்டியல் நூலார். ஆக கலம்பகம் என்பது பலவகை உறுப்பும் பொருளும் பாட்டும் கலந்து பாடப் பெறுவது.

*"பல்பூ மிடைந்த படலைக் கண்ணி"*

(பெரும்பாண் : 174)

என்னும் பெரும்பாணாற்றுப்படைப் பாடலடிக்கு 'பல

பூக்கள் நெருங்கிய கலம்பகமாகிய மாலை' என்று நச்சினார்க்கினியர் உரை செய்திருக்கின்றனர். தொண்டரடிப் பொடியாழ்வார் பாடிய திருப்பள்ளியெழுச்சியில் வரும்,

"களிவண்டு மிழற்றிய கலம்பகம் புனைந்த
அலங்கலந் தொடையல்"

என்னும் தொடர்மொழி, பலவகை மலர்களால் தொகுக்கப்பட்ட மாலை என்னும் பொருள் தருகின்றது.

ஆகவே பல்வேறுவகைப்பட்ட நிறமும் வடிவும் மணமும் உடைய மலர்களால் தொடுக்கப்பட்ட பூமாலை கலம்பகம் என்னும் பெயர் பெற்றாற்போல, பலவகையான ஓசை நயமுடைய பாக்களும் இனங்களும், உறுப்புக்களும் பயின்று, அகமும் புறமும் அகப்புறமுமாகிய திணைகள் விரவி, உவகை, பெருமிதம், முதலிய சுவைகளையுடைத்தாய் அமையப் பாடப்படும் பாமாலை கலம்பகம் எனப் பெயர் பெற்றது எனலாம்.

கி. பி. 825 முதல் 850 வரையில் அரசாண்ட பல்லவ அரசன் மூன்றாம் நந்திவர்மனைப் பற்றி எழுந்ததொரு சிறு காப்பியமே நந்திக்கலம்பகம். இதைப் பாடியவர் பெயர் புலனாகவில்லை. நந்திவர்மன் வாழ்வை முடிக்கக் கருதிப் பல சூழ்ச்சிகளையும் முயன்று பார்த்த அவனது மாற்றாந் தாயின் புதல்வன் ஒருவன் சிறந்த புலவன் ஆதலின் நந்திக்குத் தீது உண்டாகுமாறு அவன்மீது அறம் வைத்து ஒரு கலம்பகம் இயற்றினான். அதன் பாடல் ஒன்றினை ஒருநாள் இரவு நகர் சோதனைக்காலத்தில் கேட்ட நந்திவர்மன், பாடலின் சுவையில் தன்னை மறந்து பாடல்கள் அனைத்தையும் பாடுமாறு வற்புறுத்தினான்; அறம் வைத்துப் பாடிய இப்பாடல்கள் தன் உயிரையே அழிக்க எழுந்தன என்று தெரிந்தும், தமிழ்ப் பாடலின் இன்பத்தை உயிரினும் மேலாகக் கருதி உயிரையும் இழக்கத் துணிந்தான். நந்திக் கலம்பகம் அரங்கேற்றப்பெற்றது. நந்திவர்மன், ஈமச்சிதையிலிருந்து இறுதிப் பாடலை கேட்ட வண்ணம் உயிர் துறந்தான்.

நந்திக் கலம்பகம் நூலைப்பற்றிய இக்கதையை,

"தம்பியர் எண்ணமெல்லாம் பழுதாக வென்ற
தலைமான வீரதுவசன்" (86)

என நந்திக் கலம்பகமும்,

"நந்தி கலம்பகத்தால் மாண்டகதை நாடறியும்"

என்று சோமேசர் முதுமொழி வெண்பாவும்,

"கள்ளாரும் செஞ்சொற் கலம்பகமே கொண்டு
[காயம்விட்ட
தெள்ளாறை நந்தி எனும் தொண்டைமான்"

என்று தொண்டை மண்டல சதகமும் குறிப்பிடுகின்றன.

பக்தி இலக்கிய காலப் பகுதியில் எழுந்த இச்சிறு நூலில் குறிப்பிடப்படும் தாவரங்களையும் அவை விளக்கும் செய்திகளையும் சுட்டுவதே இக்கட்டுரையின் நோக்கம்.

1) கமுகு:

இது ஒருவிதையிலைத் தாவரக் குடும்பமான பாமே குடும்பத்தைச் சார்ந்த அரிக்கா கட்டிச்யூ எனும் தாவரமாகும்.

நந்தி மன்னனது ஆட்சிக்குட்பட்ட சோழ நாட்டில் தென்றற் காற்றானது கமுகஞ் சோலையில் நுழைந்து கமுகின் பாளையைத் தோய்ந்து, அதன் இன்ப மணத்தைக் கொள்ளைகொண்டு உலவி வருகின்றது என்பதனை,

"தண்டலையில் பூங்கமுகம் பாளை தாவித்
தமிழ்த்தென்றல் புகுந்துலவும் தண்சோ
ணாடா!" (78 : 2)

என்று குறிப்பிடுகிறார் ஆசிரியர்.

2) கரும்பு:

கிராமினே குடும்பத்தின் சக்காரம் அபிஷினேல் என்னும் தாவரமே கரும்பு.

காதல் தேவனும் மன்மதன் கையில் வைத்திருப்பது கரும்பு வில். தலைவியானவள் நந்தி மன்னன்பால் காதல் கொண்டாள் என்பதனைச் சுட்ட ஆசிரியர்,

"மன்மதன்கைச் சுரும்பெடுத்தான்" (81 : 1)

எனும் தொடரைப் பயன்படுத்துகிறார்.

3) கற்பகம் :

கற்பகம் தேவலோகத்தின் மரம். ஐந்தருக்களில் ஒன்று. தேவர்கள் பாற்கடல் கடைந்த காலத்தில் தோன்றியது. இது விருக்ஷவுருப் போன்றது. எட்டுக் கிளைகளையுடையது. இதில் படருங்கொடி காமவல்லி. இது விரும்பினதைத் தரும் வலியுள்ளது.

வரையாது வழங்கும் வள்ளன்மைக்கு ஒப்பாகக் கற்பகத்தருவைக் கூறுதல் மரபு. நந்திமன்னன் இறந்துபட அவன்மீது கையறுநிலை பாடும் புலவர், கொடைத்திறம் வாய்ந்த உன்கரங்கள் கற்பகத் தருவை அடைந்துவிட்டன. நானும் என் வறுமைத் துன்பமும் எவ்விடம் புகுவேம் என வருந்திக் கூறுகிறார்

"கற்பகம் அடைந்ததுன் கரங்கள்" (113 : 2)

4) குமுதம் :

குமுதம் வெள்ளாம்பல், செவ்வாம்பல் இரண்டுக்கும் பொதுவான பெயர் என அகராதியால் தெரியவருகிறது. ஆங்கிலத்தில் இதனை வாட்டர் லில்லி என அழைக்கின்றனர். தாவரநூலார் இதனை நிம்பியா ஸ்டெல்லேட்டா என வழங்குகின்றனர்.

"இந்தப் புவியில் இரவலருண் டென்பதெல்லாம்
அந்தக் குமுதமே அல்லவோ" (96 : 1–2)

நந்திவர்மனின் கொடைத்திறனைக் கூறவந்த ஆசிரியர், நந்திமன்னன் அரசாளும் இப்புவியில் – இரவலர் – எனும்

சொல் குமுதமலரையே குறிக்குமென ஐயமின்றிக் கூறுகிறார்.

இரவில் மலர்வது குமுதமலர் என்னும் செய்தி இவ் வரியால் தெளிவாகிறது. இரவில் மலரும் மல்லிகை, முல்லை, இருவாட்சி போன்ற மலர்கள் உள்ளனவேனும் நிறமாண்பும் பெருமையும் பற்றி 'இரவலர்' எனும் சொல் குமுத மலரையே குறிப்பதாயிற்று.

5) குரவம்:

தாவர இயலார் குரா எனவும் வழங்கப்படும் குரவ மரத்தினை ரூபியேசியே எனும் தாவரக் குடும்பத்தின் வெப்ரா காரிம்போசா எனும் பெயரால் குறிப்பர். இம் மரத்தின் மலர்கள் பாவை வடிவுடையதென்பர் ஆன்றோர்.

*"குரவம் பாவை முருகலர் சோலை"*

எனக் குரவின் பாவை போலும் மலர்களைத் திருஞான சம்பந்தரும் தேவாரத்தில் குறிக்கிறார்.

*"குரவலர் பொழிலிற் கோலக் கோட்டிடை [இல்லை ஆகில்*
*இரவலர் மலர்கள் எங்கும் இல்லையோ நல்குவேனே."* (62 : 3-4)

சுட்டிக்காட்டிய இவ்வரிகளில் தலைவன் கொணர்ந்த கையுறை மலர்களைத் தலைவி ஏற்க மறுக்க, தலைவன் கச்சி நாட்டுக் காவலனாகிய நந்தி மன்னன் நாட்டில் இது போன்ற தழைகட்கும் பூக்கட்கும் தானா பஞ்சம். பகலில் மலரும் குரவம் போன்ற மலர்கள் கிடைப்பதருமையாயி னும், இரவில் மலரும் மலர்கள் உண்டு. அவற்றை இரவுப் பொழுதில் கொண்டு தருகிறேன் எனக் கூறித் தன் கையுறை மலர்களைத் தலைவியிடம் ஏற்பிக்கிறான்.

6) குவளை:

பிரச்சினைக்குரிய இத் தாவரத்தை அல்லி, ஆம்பல் இனத்ததெனக் கலைக்களஞ்சியத் தொகுப்பாளரும் பிறரும்

குறிப்பர். ஆயின் உரையாசிரியர் தரும் விளக்கங்களின் அடிப்படையில் பார்க்கும் போது **ஐக்கார்னியா** எனத் தாவர இயலார் கூறும் **போன்றிடெரியேசியே** குடும்பத் தாவரமாக இருக்கலாம் எனத் தோன்றுகிறது.

பொதுவாகப் பெண்டிரின் கண்களுக்குக் குவளை மலரை ஒப்புமை கூறுதல் மரபு. நந்திக் கலம்பகத்திலும் கண்களுக்கு உவமை கூறும் மரபு உள்ளது. கருங்குவளை மலர்களை ஒத்துள்ள தலைவியின் கண்களை,

"குவளை கண்கள் நெடிய" (64 : 3)

என்றார் ஆசிரியர்.

காலைப் பொழுதில் விழித்தெழும் கன்னியர் கண்கள் கருநிறத்தோடு மிளிர்வது களையெடுக்கும் இளமங்கையர் கள் வயல்களிலிருந்து பறித்தெறிகின்ற தேன் சொட்டும் குவளை மலர்களை ஒத்துள்ளதென ஒப்புமை கூறினார்.

"கோலக் கொடி அன்னவர் நீள்செறுவில்
குறிதேன் வழிகொண்ட லருங்குவளை" (85:1)

என்னும் வரியால் குவளை மலர்கள் வயல்களில் களையாக வளர்வன என்ற செய்தியை அறிகிறோம்.

மேலே காட்டிய பாடலடியாலும்

"குவளை மலரின் மதுவாரும் வண்டுகாள்"(101:2)

என்னும் வரியிலும் குவளை மலர்கள் தேன் நிறைந்தவை என்பதை உணர்த்தினார்.

"பொரு புணரி சங்கு வளைமென்
நாகிடறு கானல் வளமயிலை" (55 : 2-3)

இவ்வரியாலும் குவளைச் செடிகள் அலைகள் மோதும் கடற்கரைக்கானலில் நெருக்கமாக வளரும் என்ற செய்தி கூறினார்.

குவளையின் அரும்புகள் உட்பக்கமாகச் சுருண்டிருக்கின்றன. தென்றல் அதனைத் தடவி வருகின்றது.

"உண்டிரையின் செங்கழுநீர் இலஞ்சிமாடே"
(78 : 1)

இங்கு குவளையின் மலரும் பருவமெய்திய உட்பக்கமாகச் சுருண்ட பேரரும்பை உண்டிரை எனப் புலவர் குறித்தார். பருவம் முதிர்ந்த பேரரும்புகள் தேன் பெருகி விரிய மலரலாம், வண்டுகள் தேனுண்ண வேண்டி அவற்றை நெகிழ்க்க அவை மலரலாம். எங்ஙனமாயினும் மலர்ந்து மணம் பரப்பும் குவளை மலர்களின் மணத்தைத் தென்றல் கவர்ந்து வருகின்றது.

சோலைகள் தோறும் தன் மலரம்புக்காக மலர்களைப் பறித்த மன்மதன் வாவியில் அளவிறந்த குவளை மலர்களைப் பறித்தான்.

"காவி அனந்தம் எடுத்தான் மதன்" (8 : 1)

குவளையும் மன்மதனின் மலரைங்கணையுள் ஒன்று.

7) கைதை:

கைதையைப் பேண்டனேசியே குடும்பத் தாவரமான ஃபேன்டனஸ் ஓடரைற்றிஸ்மஸ் எனும் தாவரமாகச் செடி நூலார் குறிப்பர். தாழையின் வகையில் ஒன்முன இத் தாவரத்தையே தாழை எனக் குறிப்பதும் உண்டு. பொது வாக நீர் நிலைகளின் அருகிலேயே இத்தாவரம் காணப்படும்

"கைதைப் பொழிலுலவும் காவிரி நீர்" (50 : 3)

என்னும் வரியில் கைதைப் பொழிலூடே காவிரி நீர் பாய்ந்து சென்றது எனப் புலவர் கூறுகிருர்.

8) கொன்றை:

சிசால்பியேசியே குடும்பத்தின் கேஷியா ஃபிஸ்டுலா என்னும் தாவரமே கொன்றை மரமாகும். மாலையில் தொடுத்தாற் போன்று மலர்கள் கொத்தாக மலர்வதால் இதனைச் சரக்கொன்றை என அழைப்பர்.

சிவபெருமானின் சடையை அலங்கரிக்கும் மலர்களுள் கொன்றை மலரும் ஒன்று. அது மாலையாகத் தொடுக்கப் பட்டு சிவன் தலையில் உள்ளது.

"வீசிகையிற் கொன்றையும் வெள்ளெருக்கும் [விராய்த்தொடுத்த
வாசிகையின் ஊடேவெண் மதிக்கொழுந்தைச் சொருகினையே" (5. தாழிசை: 1)

தம் காதல் தலைவரது பிரிவால் வாடும் மங்கையர் தம் கொங்கைகளில் பொன்போலும் நிறம் வாய்ந்த பசலை படரச் செய்யும் கார்காலத்தில் கொன்றை மரங்களும் பொன்னொத்த மலர்களைச் சொரியாநின்ற செய்தி காட்டு கிறார் புலவர்.

"கொங்கைகளும் கொன்றைகளும் பொன் [சொரியும் காலை" (104: 2)

நந்திவர்மனின் கொடைத்திறத்தினை,

"காஅர் தளிர்த்த கானக் கொன்றையின்
புதுப்பூப் பொலன்கலன் அணிந்து" (27 : 8-9)

என்னும் வரிகள் காட்டுகின்றன. பண்டு கிழிந்த ஆடைகளை அணிந்த பாணன் நந்திமன்னன் பால் சென்று பரிசில் பெற்று வந்தபின் இன்று – மழையால் தழைத்த காட்டி லுள்ள பொன்போலும் புதுமலரை நிகர்த்த பொன் அணி கலன்களை அணிந்துள்ளான் எனக் கண்டோர் வியப்புற்றுக் கூறுவதாக இப்பாடலடிகள் அமைந்துள்ளன.

9) சண்பகம்:

ஆங்கிலத்தில் **கோல்டன் சம்பா, எல்லோ சம்பா** என்றெல்லாம் குறிக்கப்படும் சண்பகம் தாவர இயலாரால் **மைக்கீலியா சம்பகா** என்றழைக்கப்படுகிறது. **மெக்னோலி யேசே** குடும்பத்தைச் சார்ந்த இத்தாவர இனப்பெயர் சண்பகம் என்னும் தமிழ்ப் பெயரின் ஆங்கில வடிவமாகவே தோன்றுகிறது.

"ஒண்பொழிலில் சண்பகத்தார் தடவிஓடி" (78:1)

தென்றற் காற்று சோலைகளில் நிறைந்துள்ள சண்பக மரங்களைச் சேர்ந்து அதன் மலர்மணம் கவர்ந்து வருகிறது என்கிறார் ஆசிரியர்.

10) சந்தனம்:

ஸாண்டலேஸியே குடும்பத்தின் ஸான்டாலம் ஆல்பம் எனும் தாவரமே சந்தனமாம். மரமாக வளரும் இத் தாவரம் ஆரம் எனவும் வழங்கப்படும்.

மணம் மிக்க சந்தனம் குளிர்ச்சியும் உடையது என்பதனைச்

"செழுஞ் சீதச் சந்தனம்" (108 : 1-2)

என்னும் தொடரால் கலம்பக ஆசிரியர் குறிப்பிடுகிறார்.

11) செங்நெல்:

ஒரைஸா ஸட்டைவா என்று செடி நூலாரால் குறிக்கப் படும் நெல் புல்லினமாகிய கிராமினே குடும்பத் தாவர மாகும். செந்நெல் ஒரு சிறந்த நெல் வகையாகும்.

"செஞ்சாலி வயற்படர் காவிரிசூழ் திருநாடுடை
[நந்தி" (15 : 3)
"கவரிச் செந்நெற் காடணி சோலைக் காவிரி
[வளநாடன்" (32 : 1)

இவ்வரிகள் காவிரி சூழ்ந்த நாட்டை ஆண்டு வந்த நந்தி மன்னனின் காவிரியால் வளம் கொழிக்கும் வயல் களில் செந்நெல் நிறைந்து காணப்படும்; அவை கவரிகளின் திரள் போன்ற கதிர்க்குலைகளைத் தாங்கியுள்ளன என்ற செய்திகளைச் சுட்டுகின்றன. செந்நெற் பயிர்கள் நிறைந்த வயல்களை உடைய கச்சி வளநாட்டில் பலவகைப் பறவைக் கூட்டங்கள் உள்ளன.

''செந்நெல் வயல் குருகினஞ்சூழ் கச்சி
[வளநாடன்'' (105 : 3)

காவிரியின் நீர்ப்பெருக்கு வேலியாயிரம் விளைவித்தும் நெல்லின் கதிர்கள் மறையும்படியும் காட்சி தருகின்றது.

''நெல்
கதிர்தொகு வருபுனல் கரைபொரு
திழிதரு காவிரி வளநாடா'' (21 : 1-2)

12) **தளவம் :**

**ஜேஸ்மினம் ஹா"யூமைல்** என வழங்கப்படும் **ஒலியேசியே** குடும்பத் தாவரமாகிய தளவம் **கோல்டன் ஜேஸ்மின்** என ஆங்கில நூலாரால் வழங்கப்படுகிறது.

நந்திமன்னன்,

''தளவுகண் டாலன்ன வெண்ணகை'' (52: 3)

உடையவன் என்று கூறுகிருர் கலம்பக ஆசிரியர்.

13) **தாமரை :**

**நிம்பியேசியே** குடும்பத்தின் **நிலாம்பியம் ஸ்பீசியோஸம்** என்னும் தாவரம் தாமரையாகும். முளரி, பங்கயம், கோகனகம், கமலம், தேனுறுமலர் என்ற வெவ்வேறு பெயர்களால் தாமரை நந்திக் கலம்பகத்தில் குறிப்பிடப் படுகிறது.

மரபு நிலைப்படி கால்களுக்குத் தாமரை உவமையாகக் கூறப்படுகிறது.

''செம்மை முளரி மலர்த்தாள்'' (1: 3-4)
''செழுமலர்ச் சேவடி'' (2: 4)
''அரியின் மலர் பதம்'' (3: 2)

இச்சான்றுகளில் கடவுளரின் திருவடிகளுக்குச் செந் தாமரை மலர் ஒப்புமையாகக் கூறப்படுகிறது.

"பங்கயக்கை
நெரித்தே வயிற்றில்வைத் தேநிற்பளே வஞ்சி"
(100: 3-4)

என்னுமிடத்துப் பெண்ணின் சிவந்த கரத்துக்குச் செந்தாமரை மலர் ஒப்புமையாகக் கூறப்படுவதைக் காண்கிறோம்.

மலர்களெல்லாம் மலரவரும் கார்காலத்தில் தாமரை மலரும் மலர்ந்தது என்பதை,

"கோகனக நகைமுல்லை முகை நகைக்கும்
காலம்" (104 : 2)

என்னும் தொடரில் கூறுகின்றார்.

செந்தாமரை மலரில் அமர்ந்திருக்கும் திருமகளை

"செய்ய கமலத் திரு" (112 : 1)

என்று குறிக்கும் புலவர், நந்தி மன்னன் இறந்து பட்ட நிலையில், அவனிடம் மாறாது குடிகொண்டிருந்த செல்வச் செவிலியாகிய திருமகள் தன் கணவனாகிய திருமாலைப் போய் அடைந்தாள் என்கிறார்.

"தேனுறு மலராள் அரியிடம் புகுந்தாள்"(113:3)

இவ்வரியில் தேனுறு மலர் என்பது சிறப்பு நோக்கிச் செந்தாமரை மலரைக் குறித்தது.

14) தாளி - அறுகு :

இது கிராமினே குடும்பத்தின் சைனோடான் டக்டைலான் என்னும் புல்லாகும்.

நந்திமன்னனின் திருவடிச் சிறப்புக் கூறவந்த ஆசிரியர், அவனது பாதங்களின் கீழ் வேள்வி செய்யும் அந்தணர்களும், வீரக்கழலணிந்த மன்னர்களும் பணியுங்கால்

அவர்தம் தலைகளில் சூடிய தாளிப்புல்லாம் அறுகம்புல் உதிர்ந்து கிடக்கின்ற காட்சியைச் சுட்டுகின்றார் அம் மன்னன் காலடிகளில் குறை வேண்டுவார் தம் முடிசூடிய மலர்களெல்லாம் உதிர்ந்து கிடக்கும் காட்சி அவன் கால் களில் மலரிட்டு வழிபாடு செய்தலை ஒத்துத் தோன்றும்

"ஓம மறைவாணர் ஒண்பொற் கழல்வேந்தர்
தாம முடிக்கணிந்த தாளிப்புல் — கோமறுகில்
பாவடிக்கீழ்ப் பல்யானைப் பல்லவர்கோன் நந்திதன்
சேவடிக்கீழ்க் காணலாம் சென்று."

அறுகம்புல் வழிபாட்டில் சிறந்தது. அறுகும் அரிசியும் கூட்டி அட்சதையாக - மங்கலப் பொருளாக மண இல்லங் களில் பயன்படுத்துவதை இன்றும் காணலாம். இறைவன் தாளி அறுகு மாலையை அணிந்துள்ளான் என்பதைத்

"தாளி அறுகின் தாராய் போற்றி"

என்ற திருவாசகத் தொடரும் சுட்டுகிறது.

15) தினை :

**கிராமினே** குடும்பத்தைச் சார்ந்த தினை தாவரஇயலாரால் **செட்டாரியா இட்டாலிகா** எனப் பெயரிட் டழைக்கப்படுகிறது. இது குறிஞ்சி நிலத்தாவரமாகும்.

"தினையும் விளைந்தது" (37 : 2)
"ஏகின்றது புனமும்தினை" (71 : 1)

எனும் இத்தொடர்களால் தினைப்புனத்தினைக் காவல் காத்து வந்த தலைவி தினைப்புனக்காவல் முடிந்து தான் இற்செறிக்கப்படும் காலம் வந்துவிட்டதனைத் தலைவனுக்கு உணர்த்துவதை அறிகிறோம்.

"புனத்து நின்ற வேங்கை" (38 : 1)

எனும் வரி தினை குறிஞ்சிநிலத் தாவரம் என்ற கூற்றை உறுதி செய்கிறது. கதிரறுத்த தினையின் அடிப்பாகம் **'இருவி'** (40:1) என்னும் சொல்லால் குறிக்கப்படுகிறது.

16) துளவு:

துளவு, துழாய், துளசி என்றெல்லாம் அழைக்கப் படும் இத்தாவரத்தினைச் செடி இயலார் லேபியேற்றே குடும்பத்தின் **ஆஸிமம் பெஸிலிக்கம்** என்னும் தாவரமாகக் குறிப்பர்.

திருமாலுக்குரிய மாலை துளசி மாலையாம். நந்தி மன்னனும் **'திருவுடை மன்னனைக் காணில் திருமாலைக் கண்டேனே'** என்னும் கூற்றுப்படித் திருமாலின் அவதார மாகக் கொள்ளப்படுவதால் துளசி மாலையை அணிந்திருந்ததாகப் புலவர் குறிப்பிடுகிறார். தலைவி நந்தி மன்னனின் மாலைக்காக ஏங்கி நின்று, கானல் கம்புளை நோக்கி,

"துளவு கண்டாய்பெறு கின்றிலம்" (93 : 1)

என்று கூறுவதாகக் குறிக்கிறார் ஆசிரியர்.

17) தொண்டை:

ஆதொண்டை எனவும் வழங்கப்படும் தொண்டை சாதாரணமாக நீர்வளம் நிறைந்த பகுதிகளில் வளர்ந்து வரும் கொவ்வைக் கொடியேயாகும். **குக்கர்பிட்டேசியே** குடும்பத்தின் **காக்ஸீனியா இன்டிகா** என்பது இக்கொடிக்குத் தாவர இயலார் தரும் பெயராகும். **ஸ்கார்லட் கோட்** என இதன் பழத்தின் நிறத்தால் ஆங்கில நூலார் இதற்குப் பெயரிட்டுள்ளனர்.

கொவ்வை என்றதுமே அதன் பழமும் பழத்தின் சிவந்த நிறமுமே நம் கண்முன் தோன்றுவது இயற்கை. மங்கையரின் அதரத்தின் சிவப்பிற்கு கொவ்வைப் பழத்தை உவமையாகக் கூறுவது புலவர் மரபு. மரபுநிலை தவறாது கலம்பக ஆசிரியரும்,

"அறம் பெருகும் தனிச் செங்கோல் மாயன்
[தொண்டை
அம்கனிபோல் சிவந்துதிரு முகத்துப் பூத்து
மறிந்துளதே பவளவாய்" (64 : 1-2)

என்று கூறுகிறார். தொண்டை மன்னனுக்குரிய மாலை யாதலால் அம்மலர் தோன்றிய செடியின் கனியை வாயின் செந்நிறத்துக்கு உவமையாக்கினர். நந்திமன்னன் நாட்டில் வாழும் காரிகையாகிய தலைவியின் உறுப்பழகினைப் புகழ்ந்து கூறி, இத்தகைய பன்னலங் கனிந்த பாவையைப் பிரிந்து எவ்வாறு காலம் கழிப்பேன் என்று தன் நெஞ்சோடு தலைவன் கூறுவதாக இப்பகுதி அமைந்துள்ளது.

தொண்டை மலர்மாலை பல்லவர் குலத்தினரின் அடையாள மாலையாகும்.

நந்தி மன்னன்.

''தொண்டையங் கோன் நந்தி'' (49 : 3)

என்று குறிக்கப்படுகிறான்.

''பைந்தார் நந்தி'' (5- சுரிதகம் : 3; 39 : 4)

என்னுமிடங்களில் இத்தொடர் மலரும் தழையும் விரவிய தொண்டை மாலையணிந்தவன் நந்திமன்னன் என்பதைத் தெளிவாக்குகின்றது.

''அருளாதொழி கின்றது தொண்டை
[கொலோ'' (15 : 2)
''புதுமென் தொண்டைய தருளாயே'' (45 : 2)
''மல்லலம் திண்தோள் மேல்
மெல்கு தொண்டையும் தந்தருள்கிலன்'' (63:2-3)
"நந்தி நின
பாசிலை அந்தொண்டை அல்லது பாடாளே"
(34 : 3-4)
"இவளிளங் கொங்கை அவன்வளர்
[தொண்டையல்லால்
நாரு தீவள்திரு மேனியும்" (44 : 3-4)
"தொண்டைமேல்
பேராசை வைக்கும் பிராயமோ" (66 : 1-2)
"நறைகெழு தொண்டையோன் தொண்டை
[கண்டபின்

இறைகெழு சங்குயிர் இவளுக் கீந்ததே"
(70 : 3-4)

"முடிமேல்
வம்புயர் தொண்டை காணும் மடமாதர்
தங்கை வளைகொண்ட தென்ன வலமே"
(86 : 3-4)

"தொண்டை ஒற்றுவள் இவள்தோள் வளையே"
(88 : 4)

என்னும் இப்பாடலடிகளெல்லாம் காஞ்சி நகர மகளிர் தொண்டை மாலையணிந்த நந்திமன்னன் மீது கொண்டிருந்த அளவற்ற காதலைப் புலப்படுத்துகின்றன. தலைமகளது வருத்தங்கண்ட செவிலித்தாய், கச்சிநகர்க் காவலனான நந்தி மன்னது உயர்வு மிக்க ஆதொண்டை மீது என் மகளுக்குத் தளர்ச்சி உண்டாகியுள்ளது. அவன் அக்குறிப்புணர்ந்து அதை அவளுக்குக் கொடுத்தலே சிறப்புடையது என்று கூறும் பகுதி வளர்ப்புத்தாயின் அன்புப் பெருக்கினைச் சுட்டுவதாகும்.

"கச்சி நந்தி
நலங்கொள் அன்னவன் அலங்கல்மேல்
ஒற்கம் என்மகள் உரைசெய் தோவுல
களிப்பன் இத்திறன் உரைத்திடே" (26 : 3-4)

நந்தி மன்னன் உலாவருங்கால், இளமங்கையர் காதலாற் கனிந்து தொடர்ந்து சென்று அவன் தொண்டை மாலையை விரும்பி இரந்து முன்னின்றனர். அவன் அவர்கட் கெல்லாம் தொண்டை மாலையை அருளாது சென்றான்; காதலாற் கன்றிய நங்கையொருத்தியோ தான் செல்லு மிடமெல்லாம் முகர்ந்து இன்புற்று, எம் கொங்கைகள் நந்தி மன்னனுக்கே உரியவை; ஆகவே அக்கொங்கை முற்றத்தில் அவன் தொண்டை மாலை புரள்வது உறுதி. அதற்கு முன்னரேயே அதன் மணத்தை ஈந்து இன்புறுத்துகிறது. என்னும் பகுதி படித்து இன்புறுதற்குரியது.

"தொடர்ந்து பலர்இரந்த தொண்டையந்தார்
[ நாங்கள்
நடந்த வழிகள்தொறும் நாறும்—படர்ந்த
மலைகடாம் பட்டனைய மால்யானை நந்தி
முலைகடாம் பட்டசையா முன்" (102)

"என்னையா னேபுகழ்ந்தேன் என்றுதே
[ எப்புவிக்கும்
மன்னர்கோன் நந்தி வரதுங்கன் —பொன்
[ முடியின்
மேல்வருடும் தொண்டை விரைநாறும்
[ இன்னமும்என்
கால்வருடும் சேடியர்தம் கை" (94)

இப்பாடல் மன்னவன் மாலையின் மாண்பை உணர்த்துவதாக உள்ளது. "நந்தி மன்னன் மாலையின் உயர்ந்த மணத்தை என்னென்பேன்! மற்ற மாலைகள் அன்றலர்ந்த மலர்களாக இருந்தால் மணமிருக்கும்; வாடினல் மணங் கெட்டுப்போகும். எம் வேந்தன் மாலை அத்தகையதன்று; மன்னனுக்கு மாலை தொடுத்துக் கொடுக்கும் வண்ண மகளிர் எனக்கும் மாலை தொடுத்துக் கொடுப்பார்கள்; அவர்கள் என் காலைத் தடவும் போதுகூட அவர் கைகளில் தொண்டை மாலையின் மணம் கமழ்ந்து கொண்டிருக்கும். இத்தகைய மாலையை யாம் பெற்றுலே பெரும் பேறுகும்" என்று தலைவி தோழிபால் கூறுவதாக அமைந்துள்ளது இப்பாடல். மன்னவன் மாலை மாண்புறுத்தும் இப்பாடல் தலைவியின் அளவற்ற காதலையும் உணர்த்துவதாக உள்ளது.

"மொழியார் தொண்டைப் பன்மலர் முற்றும்
[ தெருவந்து
விழியாள் என்றும் மேனி வெளுத்துற
[ மெலிவாளே." (47 : 1-2)

இப்பாடல்டிகள், கார் கண்ட தலைவன், தன் பாகனிடம் மாமன்னன் வலம்வரும் மாமல்லபுர வீதியெல்லாம் தொண்டை மலர்களும் பிற மலர்களும் சிதறிக் கிடக்கக் கண்டு தன் தலைவி மேனி மெலிவாளாதலால் தேரை விரைந்து செலுத்த வேண்டுகிறான். மன்னன் மலர் மகளிர்க்குக் காதல் சிந்தனையைத் தோற்றுவிக்கும் செய்தியை இவ்வரிகளால் அறிகிறோம்.

18) **பிச்சி :**

**ஓலியேசியே** குடும்பத்தின் **ஜேஸ்மினம் மலபாரிக்கம்** என்னும் இச்செடி ஜாதி எனவும் வழங்கப்படுகிறது. **மலபார் ஜேஸ்மின்** என ஆங்கில நூலார் இதனைக் குறிப்பிடு கின்றனர். பிற இலக்கியங்களில் பித்திகை என்ற சொல் வழக்கில் உள்ளது. மழை பொழிய பிச்சி மலரும் என்பதை,

*"பிச்சிகளும் தங்களின் மகிழ்ந்து*
*பொற்பவள வாய்திறந்து பூச்சொரியும் காலம்"*
*(105 : 2)*

என்னும் வரிகளில் கூறினர்.

19) **புன்னை :**

நெய்தல் நிலத்ததாகிய புன்னை தாவர இயலாரால் **கட்டிபெரே** குடும்பத்து **கேலோபில்லம் ஐனோபில்லம்** என்னும் தாவர இனப் பெயரால் குறிக்கப்படுகிறது. ஆங்கிலேயர் இதனை **அலெக்ஸாண்டிரியன் லாரல்** என்று கூறுகின்றனர்.

*"ஆனிபோய் ஆடிவரை ஆவணியின் காலம்*
*புன்னைகளும் பிச்சிகளும் தங்களின்ம கிழ்ந்து*
*பொற்பவள வாய்திறந்து பூச்சொரியும்*
*[ காலம்"     (105 : 1-2)*

முதுவேனிற் பருவமாகிய ஆனி ஆடி மாதம் கழிய ஆவணி மாதம் வரும். ஆவணி மாதம் கார்காலமாகும்.

பிரிந்து சென்ற தலைவன் திரும்பி வரும் காலம் கார்காலம் ஆதலாற் புலவர் 'ஆவணியின் காலம்' என்றார். புன்னை பிச்சி போன்ற மரங்களும் செடிகளும் கார்காலம் தொடங்கி மழை பொழிந்தவுடன் தளிரீன்று இலைகொண்டு அரும்பு கட்டிப் பேரரும்பாகி மலர்வது இயல்பு. எனவே அதனை வாயாகக் கொண்டு வாய்திறத்தலை மலர்தலாகக் கொண்டு சொரியும் காலம் என்றார். காலம் கண்டு வருந்தும் தலைவியின் நிலையை இப்பாடல் சுட்டுகிறது.

20) பெண்ணை :

பெண்ணை என இலக்கியம் பனை மரத்தையே குறிக்கிறது. பொராஸஸ் பிளாபெல்லிபர் எனத் தாவர இயலாரால் குறிக்கப்படும் பனை பாமே குடும்பத் தாவரமாகும். நெடிது வளரும் இம்மரம் மல்லைக் கடற்கரைகளில் மிகுதியாகக் காணப்பட்டது. நாரைகள் வாடைக்காற்றின் குளிருக்கு அஞ்சி, பனையின் மடலிடத்தே தஞ்சமடையும்.

*"கடற்கூதிர் மொய்த்த கழிபெண்ணை நாரை*
*மடற்கூறு தோறும் மலிமல்லை"* (77 : 1-2)

21) மராமரம் :

*"சால மராமர மாவு மாச்சா"* (2669)

எனும் பிங்கல நிகண்டு நூற்பாவின்படி நோக்கினால் மராமரம் என்பது ஆச்சா என வழங்கப்படும் எபனேசியே குடும்பத்தின் டையோஸ்பைராஸ் எபோனம் என்னும் தாவரமாகும் என்பது தெளிவாகிறது.

திருமாலின் பத்து வகை அவதாரத்துள் இராம அவதாரமும் ஒன்று. இராமாவதாரத்தில் காட்டில் பதினான்கு ஆண்டுகள் தங்க நேர்ந்தபோது, தன் மனையாளை இலங்கை மன்னன் இராவணன் கவர்ந்து சென்றானாக, அவளைத் தேடிவரும் வேளையில் வானர வேந்தனான சுக்ரீவன்

இராமபிரான் வலிமையறிய மராமரம் ஏழினைக் காட்டி அம்பெய்து துளைக்க வேண்ட, அவன் அவைகளை ஓரம்பால் துளைத்தான் என்பது இராமாயண வரலாறு. நந்தி மன்னனும் திருமாலின் அவதாரமாகக் கருதப்பட்டானாதலால்,

"பண்டை மராமரம் எய்த பல்லவனே!" (88:3)

என அவனைத் தோழி கூற்றால் குறிப்பிடுகிறார் கவிஞர்.

22) மா :

அனக்கார்டியேசியே குடும்பத் தாவரமான மேஞ்சிபெரா இன்டிகா எனும் தாவரமே மாமரம். கார்காலத்தில் மாமரங்கள் தளிர்விட்டு அழகுக் காட்சி தரும். தளிர் நிறைந்த மாமரங்களில் பாடும் குயில்கள் தங்கும்.

மாமரங்கள் தளிர் விடும் கார்காலத்தை,

"வரிக்குயில்கள் மாவிலிளந் தளிர்கோதும்
[காலம்" (60 : 1)

என்று குறிப்பிடும் கலம்பக ஆசிரியர், அக்கார்காலத்தில் மாங்குயில்கள் பாடுவதால் தலைவியின் துயரம் மிகுதியாகிறது என்ற செய்தி உணர்த்துகிறார்.

"ஏயும் மாங்குயிற் கென்னைகொல் ஆவதே" (92:2)

நந்தி மன்னனின் தலைநகரமான மாமல்ல நகரின் மாயவித்தைக்காரன்,

"மாவின் வித்தொன்று
இட்டன்றே பழம்பழுப்பித் துண்ணக் காண்மின்"
(68 : 1-2)

என்று ஜனங்களை அழைக்கிறான்.

23) முல்லை :

ஒலியேசியே குடும்பத்தைச் சார்ந்த முல்லை ஜேஸ்மினம் அபிஷனேல் என வழங்கப்படுகிறது.

"நகைமுல்லை முகைநகைக்கும் காலம்" (104:2)

என்னும் தொடரால் முல்லை மலர் மலரும் காலமான கார் காலத்தைக் கலம்பக ஆசிரியர் குறித்தார்.

24) வாகை:

சிசால்பினியேசியே குடும்பத்தின் அல்பீஸியா லெபக் என்னும் தாவரமே வாகையாம். மன்னர்கள் தம் வெற்றிக்கு அடையாளமாகச் சூடுவது வாகை மலர்.

"வாகை புனைந்த பிரான்" (59 : 2)

என்று நந்திமன்னனைக் கவிஞர் குறிக்கிறார்.

25) விளவு:

ருட்டேசியே குடும்பத்தின் பெரோனியா எலிபென்றம் என்னும் தாவரமே விளவு எனப் பாடல் குறிக்கும் விளா மரமாகும்.

யானைத்தீ என்னும் நோயால் பாதிக்கப்பட்ட விளாங் கனியின் உள்ளே கனிக்குரிய சத்தில்லாது வெறுங்கூடாக இருக்கும். அத்தன்மைபோல மனம் கிளர்ச்சியின்றித் துயருற்றிருக்கும் தன்னிலையைத் தலைவி,

"வேழமுண்ட விளவு கண்டாலன்ன மேனி
[ கண்டாய்" (93 : 2-3)

எனக் குறிக்கிறாள்.

26) வெள்ளருக்கு:

அஸ்கிலபீடியேசியே குடும்பத்தின் கலோடிபிராபீஸ் ஜிக்னேற்று எனும் தாவரமே வெள்ளருக்கு என்றழைக்கப் படுகிறது.

சிவபெருமான் அணியும் மலர்களுள் வெள் எருக்கும் ஒன்று என்பதை,

"வீசிகையிற் கொன்றையும் வெள் எருக்கும்
[ விராய்த்தொடுத்த" (5. தர்ழிசை : 1)

என்னும் வரி புலப்படுத்துகிறது.

27) வேங்கை:

இது மைமோசியேசியே குடும்பத்தின் டீரோகார்ப்பஸ் மார்ஸூப்பியம் என்னும் தாவரமாகும்.

வேங்கை குறிஞ்சி நிலத்து வளர்வது.

"புனத்து நின்ற வேங்கை" (38 : 1)

என்னும் தொடர், வேங்கை மலையிலுள்ள தினைப்புனத்தின் நடுவிலும் காணப்பட்ட செய்தி தருகிறது.

நந்திமன்னனது மலைச்சாரலிலுள்ள சிறந்த ஒளிநூற் புலவன் போன்ற வேங்கை மரம் மலர் நிறைந்து நின்று முன்னறிவிப்புத் தருகின்ற வஞ்சத்தைத் தலைவி தன் தலைவனுக்குக் கூறுவதன் வாயிலாகத் தான் இற்செறிக்கப்படும் காலம் விரைந்து வந்ததென உணர்த்துகிருள்.

"நந்திதன் பூதரத்து
ஏன்ற வேங்கை இருங்கணிச் சூழ்ச்சியே"
(40 : 3-4)

மலைவாணர் தினை விளையும் காலம், வேங்கை பூத்து நிற்கும் காலமே என உணர்வர். வேங்கை பூத்தால் தினை விளைவுக்கு வந்ததென உணர்ந்து, கதிரறுக்க முற்படுவர். இவ்வாறு காலத்தைத் தவருது உணர்த்துவதால் வேங்கை மரத்திற்கு நம் சான்ருேர் 'கணி' எனப் பெயர் சூட்டி அதன் உண்மையை உணர்த்துவராயினர்.

28) வேய் :

மூங்கில் எனவும் வழங்கப்படும் இது கிராமினே குடும்பத்தின் பேம்பூஸா அருண்டனேரியா எனத் தாவர இயலாரால் குறிக்கப்படுகிறது.

பொதுவாக மகளிரின் தோளுக்கு மூங்கில் உவமை கூறப்படுகிறது. தலைவியின் தோளினை,

"வேய் நெடிய தோள்" (64 : 3)

என நந்திக் கலம்பக ஆசிரியரும் குறிப்பிடுகிறார்.

தலைவியின் இடையை வியந்து கூறும் தலைவன், ஈ பறக்குங்கால் அதன் சிறகினின்று வீசும் சிறு காற்றுக்கே ஆற்றாது முறியும் நிலையிலுள்ள தன் தலைவியின் சிற்றிடை, புகழ் மிக்க நந்திமன்னனின் மலையிலுள்ள மூங்கிற் புதரின்று மேலெழுந்து வரும் தென்றற் காற்றினால் எத்துணைத் துயருறும் என்று கூறுகின்றான்.

"கைக்குடமி ரண்டும் கனக்கும் பக்குடமும்
முக்குடமும் கொண்டால் முறியாதே-மிக்கபுகழ்
வேய்க்காற்றி னால்விளங்கும் வீரநந்தி [ மாகிரியில்
ஈக்காற்றுக்கு ஆற்றா இடை." (95)

நந்திக் கலம்பகத்தில் கமுகு, கரும்பு, கற்பகம், குமுதம், குரவம், குவளை, கைதை, கொன்றை, சண்பகம், சந்தனம், செந்நெல், தளவம், தாமரை, தாளிஅறுகு, தினை, துளவு, தொண்டை, பிச்சி, புன்னை, பெண்ணை, மராமரம், மா, முல்லை, வாகை, விளவு, வெள்எருக்கு, வேங்கை, வேய் எனும் இருபத்தெட்டு தாவரங்கள் பற்றிய செய்திகள் உள்ளன.

குமுதம் இரவில் மலர்வதாகவும், குரவம் பகலில் மலர்வதாகவும் மலர் மலரும் வேளை பற்றிய குறிப்பு

உள்ளது. கொன்றை, பிச்சி, புன்னை, முல்லை, வேங்கை போன்ற மலர்கள் மலர்வதும் மா தளிர் விடுவதும் கார் காலத்தில் நிகழ்வன எனக் காலம் பற்றிய குறிப்பும் இவ்விலக்கியத்தில் உள்ளது. வேங்கை மலரும் காலம் தினைப்புனம் விளையும் காலம் என்ற செய்தியும் உள்ளது.

உள்பக்கமாகச் சுருண்டிருக்கும் குவளையின் பேரரும்பினை உண்டிரை என்ற சொல்லால் குறிப்பிடும் சொல்லாட்சி புதியது.



# அட்டவணை

தமிழ்ப் பெயர் — ஆங்கிலப் பெயர்

தாவர இனப் பெயர் — தாவரக் குடும்பப் பெயர்

| Tamil name | English name | Botanical name | Family |
|---|---|---|---|
| அகத்தி | Tree bean | Sesbania grandiflora | Papilionaceae |
| அகில் | Eagle wood | Aqualaria agallocha | Thymeliaceae |
| அசோகு | Asoka tree | Saraca indica | Caesalpiniaceae |
| அடும்பு | Goat's foot creeper | Ipomoea biloba | Convolvulaceae |
| அத்தி | Elliptic leaved fig | Ficus glomerata | Moraceae |
| அதிமதுரம் | Licorice | Glycyrrhiza glabra | Leguminosae |
| அந்திமந்தாரை | A flower plant that blossoms in the afternoon | Mirabilis jalapa | Nyctaginaceae |
| அரக்காம்பல் | Red nymphea | Nymphaea stellata | Nymphaeaceae |
| அரசு - போதி | Pepul tree | Ficus religiosa | Moraceae |
| அல்லி | Water lily | Limnanthemum cristatum | Gentinaceae |
| அலரி (அரளி) | Indian oleander | Nerium odorum | Apocynaceae |
| அவரை | Bean | Dolichos lablab | Papilionaceae |
| அறுகு | A grass | Cynodon dactylon | Gramineae |
| அறுபதாங்குறுவை | A variety of paddy | Oryza sativa | Gramineae |
| அன்னபூரணி | A variety of paddy | Oryza sativa | Gramineae |
| ஆச்சா | A kind of timber tree | Diospyros Ebenum Koenig | Ebenaceae |
| ஆடுதுறை | A variety of paddy | Oryza sativa (i) | Gramineae |
| ஆடையொட்டி | An amaranth | Desmocaeta atropurpurea | Amaranthaceae |
| ஆத்தி - ஆர் | Indian ebony | Bauhinia racemosa | Caesalpiniaceae |

| | | | |
|---|---|---|---|
| ஆப்பிள் | Apple | Pyrus malus | Rosaceae |
| ஆம்பல் - வெள்ளாம்பல் | Water lily | Nymphaea stellata | Nymphaeaceae |
| ஆரஞ்சு | Orange | Citrus aurantium | Rutaceae |
| ஆரம்-சந்தனம் | sandal wood | santalum album | Santalaceae |
| ஆல் | com non banyan | Ficus bengalensis | Moraceae |
| ஆற்றுப்பூவரசு-ஆற்றரசு | River portia | Trewia nudiflora | Euphorbiaceae |
| இத்தி | One of the nine kinds of sacrificial wood | Ficus Virens | Moraceae |
| இதழி - கொன்றை | Indian Laburnum | Cassia fistula | Caesalpiniaceae |
| இருப்பை - இலுப்பை | Mahua of South-India | Bassia latifolia | Sapotaceae |
| இருவாட்சி | Arabian jasmine | Jasminum sambac | Oleaceae |
| இலந்தை | Indian plum | Zizyphus jujuba | Rhamnaceae |
| இறடி | Black millet | Panicum crusgalli | Gramineae |
| ஈங்கை | Species of Sensitive tree | Mimosa rubicaulis | Mimosaceae |
| உகா (பெருங்கோலி) | — | Salvadora persica | Salvadoraceae |
| உழிஞ்சில் (முடக்கத்தான்) | A Common road-side weed | Cardiospermum helicacabum | Sapindaceae |
| உழுந்து | Black- gram | Phaseolus mungo | Papilionaceae |
| எருக்கு - வெள்ளெருக்கு | Madar silk cotton | Calotropis gigantea | Asclepiadaceae |
| எருவை | A species of cyperus | Cyperus papyrus | Cyperaceae |
| எலுமிச்சம் பச்சை- எலுமிச்சந் துளசி | — | Ocimum gratissimum | Labiatae |
| எள் | — | Sesamum indicum | Pedaliaceae |
| ஏனல் | green millet | Panicum miliaceum | Gramineae |

| | | | |
|---|---|---|---|
| ஐ.ஆர். 5<br>ஐ.ஆர். 8<br>ஐ.ஆர். 20 | Varieties of paddy | Oryza sativa | Gramineae |
| ஒட்டுக்கம்பு<br>காலேஜ் கம்பு<br>வீரியக் கம்பு | A red kind of millet | Pennisetum (hybrid) | Gramineae |
| ஒட்டுச்சோளம்<br>காலேஜ் சோளம்<br>வீரியச்சோளம் | Great millet | Holcus saccharatus | Gramineae |
| ஓமை | Tooth brush tree | Salvadora persica | Salvadoraceae |
| ஓரிதழ் | Little herb with a monopetalous flower | Ionidium suffruticosum | Violaceae |
| கண்டல் | A tree of sea-shore | Kandelia rheedi | Rhizophoraceae |
| கடம்பு- வெண் கடம்பு | Common Indian oak | Anthocephalus cadamba | Rubiaceae |
| கடுகு | Mustard | Brassica campestris (rapa) | Cruciferae |
| கதிர்ப்பச்சை | — | Pogostemon heyneanus | Labiatae |
| கமுகு | Betel nut palm | Areca catechu | Palmae |
| கமலம்- தாமரை<br>பங்கயம்- புண்டரிகம் | Lotus | Nelumbium speciosum | Nympheaceae |
| கரந்தை- விஷ்ணுகிராந்தி | Iron weed | Sphaeranthus indicus | Compositae |
| கருங்குவளை -கழுநீர்-காவி-குவளை-<br>செங்கழுநீர் - நீலம் - நீலமலர் - நெய்தல் | Water hyacinth | Eichhornia crassipis<br>Pontederia Vaginalis | Pontederiaceae |
| கருணை | A variety of paddy | Oryza sativa | Gramineae |
| கருந்துளசி | Sacred basil | Ocimum sanctum | Labiatae |

| | | | |
|---|---|---|---|
| கரும்பு - செங்கரும்பு - வெண்கரும்பு | Sugar cane | Saccharum officinarum | Gramineae |
| கருமுகை | Canaga flower tree | Canaga odorata | Annonaceae |
| கல்லால் | The stone Banyan tree | Ficus infectoria | Moraceae |
| கலப்பைக் கிழங்கு - காந்தள் - கார்த்திகைப்பூ - கோடல்-செங்காந்தள்- தோன்றி - வெண்காந்தள் | Glory lily | Glorisa superba | Liliaceae |
| கவிர் – முருக்கு - முள்முருங்கை | Coral tree | Erythrina indica | Papilionaceae |
| கவரிச்சம்பா | A variety of paddy | Oryza sativa | Gramineae |
| கள்ளி | Milk bush | Euphorbia tirucalli | Euphorbiaceae |
| களா | A thorny shrub with an edible black fruit | Carissa carandas | Apocynaceae |
| கற்பகம் | One of the five miraculous trees of swarga yielding whatever is desired | — | — |
| கற்றாழை | — | Agave americana | Agavaceae |
| கறி | Pepper | Piper nigrum | Piperaceae |
| கஸ்தூரிச்சம்பா | A variety of paddy | Oryza sativa | Gramineae |
| கஜகர்ணிகை | ? | ? | ? |
| காஞ்சி | A variety of paddy | Oryza sativa | Gramineae |
| காஞ்சி | River portia | Trewia nudiflora | Euphorbiaceae |

| | | | |
|---|---|---|---|
| காயா | Iron wood tree | Memycylon edule | Melastomaceae |
| கார்த்திகைச்சம்பா | A variety of paddy | Oryza sativa | Gramineae |
| கிலுகிலுப்பைச்செடி | — | Crotalaria species | Papilioniaceae |
| கீரை | Amaranth | Amaranthus viridis | Amaranthaceae |
| கீழ்காய் நெல்லி<br>கீழாநெல்லி | — | Phyllanthus niruri | Euphorbiaceae |
| குடத்தன் குதம்பை | | ? | ? |
| குட(ஜ)சம் | Mountain jasmine | Jasminum angustifolium | Oleaceae |
| குதிரைவாலி | | Enterolobium saman | Mimosaceae |
| குந்தம்-குருந்தம் | Wild lime | Atlanta racemosa | Rutaceae |
| குப்பைமேனி | An amaranth | Acalypha indica | Euphorbiaceae |
| குமுதம் | Lotus sps | Nelumbo nucifera | Nymphaeaceae |
| குரவம் – குரா | Bottle flower | Webra corymbosa | Rubiaceae |
| குருக்கத்தி | Common delight of woods | Hiptage madablota | Malphigiaceae |
| குரோட்டன் | Crotons | Codiaeum variegatum | Euphorbiaceae |
| குளவி - மலைப்பச்சை | A fragrent mountain plant | Xanthochymus pictorius | Guttiferae |
| குறிஞ்சி | A plant of the hilly tracts | Strobilanthus kunthianus | Acanthaceae |
| கூவிளம் - வில்வம் | A sacred tree | Aegle marmelos | Rutaceae |
| கேஸரம் - மகிழம் | A precious flower tree | Mimusops elengi | Sapotaceae |
| கைதை | Wild variety of fragrent Screw pine | Pandanus species | Pandanaceae |

| | | | |
|---|---|---|---|
| கொக்கு-மா | Mango tree | Mangifera indica | Anacardiaceae |
| கொக்கிறகு | A white flowered shrub | Bauhinia acuminata | Caesalpiniaceae |
| கொய்யா - பேரை | — | Psidium guajava | Myrtaceae |
| கோங்கு | Red-silk cotton | Salmalia malabarica | Bombacaceae |
| சங்கு புஷ்பம் | A species of creeping plant | Clitoria ternatea | Papilionaceae |
| சந்திரகௌளி சூரியகௌளி | Varieties of coconut palm | Cocos nucifera | Palmae |
| சமாக்கு | ? | ? | ? |
| சமுத்திரப்பச்சை | A medicinal plant | Cardiospermum halicacabam | Sapindaceae |
| சீரகம் | Cumin | Cuminum cyminum | Umbelliferae |
| செண்பகம் | Champak | Michelia champaka | Magnoliaceae |
| செச்சை - வெட்சி - விருசூரி | Flower shrub | Ixora coccinea | Rubiaceae |
| செந்தாமரை | Red variety of lotus | Nelumbium speciosum (Var) rubra | Nymphaeaceae |
| செந்நெல் | A superior variety of paddy | Oryza sativa | Gramineae |
| செருந்தி | Panicled golden blossomed pear | Ochna squarrosa | Ochnaceae |
| சேம்பு | A plant of wet land with suculent leaves and roots | Colocasia antiquorum | Araceae |
| ஞாழல் | Fetid cassia | Cassia occidentalis | Caesalpiniaceae |
| த்விகர்ணி | ? | ? | ? |
| தம்பரத்தம் - தமரத்தை - விலிம்பி | — | Averrhoa carambola | Oxalidaceae |
| தளவம் - வெண்தளவம் | Jasmine variety | Jasminum sambac | Oleaceae |

| | | | |
|---|---|---|---|
| தாளி அறுகு | A kind of grass | Cynodon dactylon | Gramineae |
| தாழை | Fragrent screw pine | Pandanus odoratissimus | Pandanaceae |
| திராட்சை | Grapes | Vitis vinifera | Vitaceae |
| திருநீற்றுப்பச்சை | Fragrent evergreen shrub | Ocimum basilicum | Labiatae |
| தினை | Indian millet | Setaria italica | Gramineae |
| தும்பை | White dead nettle | Leucas aspera | Labiatae |
| துலுக்கச் சாமந்தி | — | Tagetes sps. | Compositae |
| துளசி | Sacred basil | Ocimum sanctum | Labiatae |
| தெங்கு - தென்னை | Coconut palm | Cocos nucifera | Palmae |
| தேக்கு | Teak tree | Tectona grandis | Verbenaceae |
| தேமா | Sweet mango | Mangifera indica | Anacardiaceae |
| தேள் கொடுக்கி | — | Heliotropium indicum | Boraginaceae |
| தொண்டை | Scarlet gourd | Coccinia indica | Cucurbitaceae |
| நஞ்சறுப்பான் கொடி | — | Tylophora asthmatica | Asclepiadaceae |
| நந்தியாவட்டம் | Milky jasmine | Tabernaemontana coronaria | Apocynaceae |
| நரந்தம் (வாசனைப்புல்) | A fragrent grass | Cymbopogon citratus | Gramineae |
| நவமல்லிகை | | Jasminum sps. | Oleaceae |
| நள்ளிருள் நாறி | A fragrent flower which blossoms in mid-night | Cestrum nocturnum | Solanaceae |
| நாகம்-நாகலிங்கம் | Canon ball tree | Couroupita guianensis | Lecythidaceae |
| நாயுருவி | One of the nine sacrificial fire | Achyranthes aspera | Amaranthaceae |

| | | | |
|---|---|---|---|
| நாவல் | Common black plum | Eugenia jambolana | Myrtaceae |
| நீர் முள்ளி | — | Asteracantha longifolia | Acanthaceae |
| நெருஞ்சி | — | Tribulus terrestris | Zygophyllaceae |
| நெல்லி | Goosberry tree | Phyllanthus emblica | Euphorbiaceae |
| நொச்சி | Evergreen tree, affording one of the 18 medicinal plants | Vitex negundo | Verbenaceae |
| நோவிதாரம் | ? | ? | ? |
| பகன்றை-சீந்தில் | — | Menisperm Cardifolium | Menispermaceae |
| பசுங்குமிழ் | Small cashmere tree | Prunus sps. | Rosaceae |
| பயறு | Green gram | Phaseolus radiatus | Papilionaceae |
| பலா-சக்கை | Jack tree | Artocarpus integrifolia | Moraceae |
| பலாசம் புரசம் | Flame of the forest | Butea frondosa | Papilionaceae |
| பன்னீர் | Tree jasmine | Guettarda speciosa | Rubiaceae |
| பனை-பெண்ணை-போந்தை | Palmyrah palm | Borassus flabellifer | Palmae |
| பாதிரி | Fragrent trumpet flower tree | Stereospermum suaveolens | Bignoniaceae |
| பாலை-வெட்பாலை | Easter tree | Wrightia tinctoria | Apocynaceae |
| பிச்சி-ஜாதி | Large flowered jasmine | Jasminum grandiflorum | Oleaceae |
| பிரம்பு | Common ratton of South India | Calamus rotang | Palmae |
| பீர்க்கு | Sponge gourtd | Luffa aegyptiaca | Cucurbitaceae |
| புகையிலை | Tobacco | Nicotiana tobacum | Solanaceae |

| | | | |
|---|---|---|---|
| புளி | Indian date | Tamarindus indica | Caesalpiniaceae |
| புன்கு | Indian beech | Pongamia glabra | Papilionaceae |
| புன்னை | Alexandrian laurel | Calophyllum inophyllum | Guttiferae |
| புனமலர் | ? | ? | ? |
| பூநாறி | | Vinca rosea | Apocynaceae |
| பூவரசு-சீலாந்தி | | Thespesia populnea | Malvaceae |
| பூளை | Javanse wool Plant | Aerva lanata | Amaranthaceae |
| மஞ்சள் | Turmaric | Curcuma longa | Zingiberaceae |
| மஞ்சள்பட்டி | — | Tecoma stans | Bignoniaceae |
| மத்தம் | Purple datura | Datura fastuosa | Solanaceae |
| மந்தாரம் | Mountain ebony | Bauhinia Variegata | Caesalpiniaceae |
| மரமஞ்சள் | Tree Turmaric | Coscinium fenestratum | Menispermaceae |
| மரமல்லிகை | — | Millingtonia hortensis | Bignoniaceae |
| மரவம்-மரா | White Indian oak | Barringtonia racemosa | Lecythidaceae |
| மரிக்கொழுந்து | A kind of fragrent shrub | Artemisia annua | Compositae |
| மருதாணி-மருதோன்றி | — | Lawsonia inermis | Lythraceae |
| மருது-மாருதம் | Murdha | Terminalia arjuna | Combretaceae |
| மல்லிகை | Musk jasmine | Jasminum pubescens | Oleaceae |
| மலைக்குன்றி | — | Abrus precatorius | Papilionaceae |
| மலையத்தி | — | Ficus racemosa | Moraceae |
| மனோரஞ்சிதம் | — | Artabotrys odoratissimus | Annonaceae |

| | | | |
|---|---|---|---|
| மாசிப்பச்சை | — | Artimisia indica | Compositae |
| மாதளம்-மாதுளை | Common-pome granate | Punica granatum | Punicaceae |
| மாதவி | Common delight of woods | Hiptage madablota | Malpighiaceae |
| மாவிலிங்கை | Sacred Lingam tree | Crataeva religiosa | capparidaceae |
| மிளகு | Pepper | Piper nigrum | Piperaceae |
| முண்டகம் | Water thorn | Astracantha longifolium | Acanthaceae |
| முல்லை-வெண் முல்லை | Common jasmine | Jasminum officinale | Oleaceae |
| முள்ளிலவு | Salmalia tree | Bombax ceiba | Bombacaceae |
| மூங்கில்-வேய் | Bamboo | Bambusa arundinacea | Gramineae |
| மௌவல் | Wild jasmine | Jasminum angustifolius | Oleaceae |
| யா | ? | ? | ? |
| ரங்கூன் மல்லிகை-செண்டுமல்லிகை | — | Jasminum humile | Oleaceae |
| ரோஜா-ரோசா | Rose | Rosa indica | Rosaceae |
| லில்லி | Lily | Lilium sps. | Liliaceae |
| வஞ்சி | A creeping plant | Cocculus cordifolius | Menispermaceae |
| வரகு | A kind of millet | Paspalum scrobiculatum | Gramineae |
| வன்னி | Indian mesquit | Prosopis spicigera | Mimosaceae |
| வாகை | Common sirissa | Albizzia lebbek | Mimosaceae |

| | | | |
|---|---|---|---|
| வாழை | Plantain | Musa paradisiaca | Musaceae |
| விசிறிவாழை | — | Ravenella madagascarensis | Musaceae |
| விளவு-விளா | Wood apple tree | Feronia elephantum | Rutaceae |
| விளாமிச்சை-வெட்டிவேர் | Cuscuss grass | Andropogon muricatus or vetiveria zizaioides | Gramineae |
| வெண்கூதாளம் | ? | ? | ? |
| வெண்தாமரை | White Lotus | Nelumbium speciosum (var)alba | Nymphaeaceae |
| வெண்துளசி | White basil | Ocimum basilicum (var) pilosum | Labiatae |
| வெள்வேல் | White Babool | Acacia leucophlaea | Mimosaceae |
| வேங்கை | East Indian kino tree | Pterocarpus marsupium | Papilionaceae |
| வேம்பு | Neem tree | Azadirachta indica | Meliaceae |
| ஜமாபுஷ்பம் | ? | ? | |